

# எம்.ஜி.ஆரிடம் ஒருமணிநேரம் வாதாடினேன்!

அண்ணா கழகத்தில் சேர ரத்தக் கையெழுத்துக் கோரும் அடியாரைச் சந்தித்தபோது...

''மதுவிலக்கைக் கைவிடுவதென்று எம்.ஜி. ஆர். முடிவெடுத்தது பற்றிக் கட்சியில் யாரிடமும் அவர் விவாதிக்கவில்லை. அவரது இந்த முடிவு எனக்கு மிகுந்த வருத்தத்தை உண்டாக்கியது. அந்தச் சமயத்தில் பாம்குரோவ் ஹோட்டலில் செயற்குழு கூடியது. 'மதுவிலக்கைக் கைவிடுவது பற்றி விவாதிக்க வேண்டும்' என்று கடிதம் எழுதி அவைத் தலைவர் அவர்களிடம் கொடுத்தேன். எம்.ஜி.ஆர். அவர்கள் என்னை மேடைக்குக் கூப்பிட்டார். நான் எந்தக் கேள்வி கேட்டாலும் அதற்கு விளக்கம் அளிப்பதாகவும் கூறினார்.

'உன் நண்பர்கள் கூட இந்த வியாபாரத்தில் ஈடுபட்டிருக்கிறார்களே' என்றார் எம். ஜி. ஆர். 'என் தந்தையே இந்தத் தொழில் செய்தாலும் மதுவிலக்கைக் கைவிடக் கூடாது என்றுதான் வற்புறுத்துவேன்' என்றேன் நான். 'அரசில் செலவுகள் அதிகமாகிவிட்டன' என்றார். கடைசிவரை இந்த ஒரு வாதத்தைத்தான் அவர் சொல்லிக் கொண்டிருந்தார். 'அரசு செலவினங்களைக் கட்டுப்படுத்தப் பல வழிகள் இருக்கின்றன. மதுவிலக்கைக் கைவிட்டால் அது மாபெரும் சமூகத் துரோகமாகும்' என்று நான் சொன்னேன். எம். ஜி. ஆர். ஒப்புக்கொள்ளவில்லை. சுமார் ஒரு மணி நேரம் இந்த விவாதம் நீடித்தது. கடைசியில் எம். ஜி. ஆர். 'நீ என்ன சொன்னாலும் மதுவிலக்கைக் கைவிடுவதென்று நான் முடிவெடுத்து விட்டேன். ஆகையால் உன் கடிதத்தைக் கிழித்துப் போட்டுவிடு' என்றுகூறி, கடிதத்தைக் கையில் கொடுத்தார். நான் நெஞ்சில் கனலைச் சுமந்து என் இடத்தில் அமர்ந்தேன்.''

''எம். ஜி. ஆர். அவர்களை உங்களைப் போல் புகழ்ந்து எழுதியவர் யாருமில்லையே?''

''அது ஒரு காலம். எம். ஜி. ஆரின் ஆட்சிக் காலத்தை இரண்டு விதமாகப் பிரிக்கலாம். 1980க்கு முன்பு, 1980க்குப் பின்பு என்று. 1980க்குப் பின்பு அவரைச் சந்திக்க, பிரச்னையை விவாதிக்க, எவ்வளவு முயற்சி செய்தாலும் பயனில்லாமல் போனதுண்டு. ஒரு மர்மக் கூடாரம் போட்டுக் கொண்டு செயல்பட்டு வந்தது எனக்கு கணிச்சலே வரவழைத்தது. இத்தனை நாள் கசப்பைக் குடித்துக் கொண்டு வந்தேன். காளிமுத்து பேச்சுக்களை நீரோட்டத்தில் வெளியிட வேண்டாம் என்று கூறிக் கட்டுப்படுத்தியது; எஸ். டி. எஸ். அவர்களின் இலாகாவைப் பறித்தது; ராஜா முகம்மதுக்கு மேல் சபை உறுப்பினர் பதவி கொடுக்காமல், பணக்காரர்களுக்கும் கழகத்துக்கு அறிமுகமாகாதவர்களுக்கும் டில்லி மேல் சபையிலும் மாநில மேலவையிலும் இடம் கொடுத்தது போன்ற எம். ஜி. ஆரின் செயல்கள், என் மனக் கொந்தளிப்பை வெளியிட வைத்துவிட்டன.''

''நீங்கள் மேல் சபை உறுப்பினர் பதவி கேட்டதாகவும், கொடுக்காததால்தான் விலகியதாகவும் பேசப்படுகிறதே...?''

''கழகத்தில் உள்ள முக்கியஸ்தர்கள் எல்லாரும் ஒவ்வொரு முறையும் தேர்தல் வந்தால் தனக்கு வாய்ப்புத் தரும்படி தலைமையைக் கேட்டுக் கொள்வது நடைமுறையில் உள்ள பழக்கம். போன முறையும் கேட்டேன். அதற்கு முந்திய முறையும் கேட்டேன். அப்போது கொடுக்காததால் நான் விலகவில்லையே! இப்போதும் என் விலகலுக்கு அது காரணமல்ல. நான் ஒரு வட்சியவாதி.''

—நமது நிருபர்

படம்: சுபா

''இந்த மண்ணும் அழகு, மலைகளும் அழகு, மங்கையரோ கொள்ளையழகு!'' என்று ஹிந்தி மொழிக் கவிஞர் ஒருவர் காஷ்மீரத்தின் சிறப்பை ரத்தினச் சுருக்கமாகச் சொல்லிவிட்டார்! குங்குமப் பூ விளையும் பூலோக சொர்க்கமான காஷ்மீர் மண்ணில் பிறந்த குமரி ஒருத்தியைத்தான் இரண்டாவது அட்டையில் வண்ணப் படமாகத் தந்திருக்கிறார் வித்யாவ்ரதா.

# கண்ணான சேவை



○ டாக்டர் மஞ்சுகுல்கர்னி

'கெரடோப்ளாஸ்டி' – கொஞ்சம் மிரட்டுகிற மாதிரி தொனிக்கிற வார்த்தையாக இருந்தாலும் பார்வையிழந்த பலருக்கு மிகவும் இனிமையான சொல் இது. இறந்து போன ஒருவரின் விழியை எடுத்து, அதில் கறுப்பு வட்டத்துக்கு மேலேயுள்ள 'கார்னியா' என்னும் விழி வெண் படலத்தை எடுத்து, பார்வையற்ற ஒருவரின் கண்ணில் அறுவைச் சிகிச்சை மூலம் ஒட்ட வைக்கிற வேலைதான் இது.

கார்னியல் கிராஃப்டிங், கார்னியல் டிரான்ஸ்பிளான்டேஷன் – எப்படி வேண்டுமானாலும் இதைக் குறிப்பிடுவார்கள். நுங்கம்பாக்கம் கல்லூரிச் சாலையில் உள்ள 'சங்கர நேத்ராலயா'வில் இதைப் பற்றி முழுவிவரமும் அறிந்துகொள்ள அணுகினோம்.

நம்மை மகிழ்ச்சியோடு வரவேற்று, இந்த ஒட்டு வேலையை அநாயாசமாகச் செய்து கொண்டிருக்கிற டாக்டர் மஞ்சு குல்கர்னிக்கு அறிமுகப்படுத்தி வைக்கிறார் டாக்டர் பத்రிநாத்.

''இன்றைக்கு ஒரு கார்னியல் கிராஃப்டிங் நடைபெறப் போகிறது. பார்க்கிறீர்களா?'' என்று எதிர்பாராத வகையில் கேட்கிறார் டாக்டர் மஞ்சு குல்கர்னி. நன்றி சொல்லக் கூட வாய் வராமல், அவர்கள் குறிப்பிட்ட நேரத்துக்குச் செல்கிறோம். ஆபரேஷன் தியேட்டரில் வழக்கமான பாதுகாப்பு உடையில் நாமும் போய் நின்று நிகழ்ச்சியைக் கவனிக்கிற அனுபவம் சுவையானதுதான்.

எதையும் தொட்டு விடாமல் விலகியே இருந்து கவனிக்க வேண்டும் என்று எச்சரிக்கப்படுகிறோம். சர்ஜரி மேஜையின் மீது ஒரு பதினைந்து வயதுச் சிறுவன். சற்று முரண்டு பண்ணி அழுது கூச்சல் போட்டுக் கொண்டிருக்கிறான். மயக்க மருந்து கொடுத்துச் சற்று நேரத்துக்கெல்லாம் அவன் நினைவிழந்து விடுகிறான். வாயிலும் மூக்கிலும் டியூப்களை வைத்துச் செருகி, இதயத் துடிப்பைக் கண்காணிக்கிற கார்டியோகிராஃப் மானிட்டர் இயந்திரத்துடன் இணைப்பேற்படுத்தி விடுகிறார்கள்.

''இதோ பாருங்கள்'' என்று டாக்டர் நம்மை அழைத்து போர்செப்ஸால் ஒரு கண்ணாடிக் குடுவையிலிருந்து எதையோ எடுத்துக் காட்டுகிறார். உரித்த சின்ன உருளைக் கிழங்கு மாதிரி ஒரு பொருள்.

ஸ்ரீலங்காவிலிருந்து இறக்கை கட்டிக் கொண்டு விமானத்தில் பறந்து வந்த கண்தான் அது! அந்தக் கண்ணின் கறுப்பு வட்டம் மின்னிப் பளபளக்கிறது.

''இந்தக் கறுப்பு வட்டத்துக்கு மேலே, கண்ணாடி போல உள்ள படலம்தான் கார்னியா. கைக் கடிகாரத்தின் மேல்ல உள்ள கண்ணாடி மாதிரி...'' என்று சொல்லிக் கொண்டே அந்தக் கண்ணைச் சுத்தம் செய்வதில் மூழ்குகிறார் டாக்டர்.

பேனா மூடி மாதிரி ஒரு கருவி. ஸ்டெயின்லெஸ் ஸ்டீலினால் ஆன அதை எடுத்து விழி உருண்டையின் கருப்பு வட்டத்துக்கு மேலே துல்லியமாக வைத்து ஒரு முறை, இருமுறை அழுத்தித் திருகியதும், விழி வெண் படலம் அளவாக, வட்டமாக வெட்டப்படுகிறது. அப்புறம் அந்த வட்டத்தைச் சின்னக் கத்தரியால் நறுக்கி வெளியே எடுத்து ஒரு சின்னப் பெட்டியில் மருந்திட்டுப் பத்திரப்படுத்தி வைத்துக் கொள்கிறார் டாக்டர்.



○ பழுதான கார்னியாவுடன்



ஒட்டப்பட்ட கார்னியாவுடன்

அடுத்து, சின்னக் காகித உறையிலிருந்து டாக்டர் எதையோ எடுப்பது தெரிகிறது. வட்டமான கார்னியா படலத்தின் ஓரத்தில் எதையோ செருகுகிற மாதிரியும் தெரிகிறது. ஒட்டடை மாதிரி மிகவும் மெலிதான இழை அது. இதை வைத்துத்தான் அந்தப் பையனின் கண்ணில் கார்னியாவைப் பொருத்தித் தையல் போடப் போகிறார்கள்.

பையன் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருக்கிறான். கண்ணிமைகளின் மயிரைக் கத்தரித்தாயிற்று. இமை ரப்பைகளில் நூல் கோர்த்து இழுத்துத் தூக்கிக் கட்டியது— எதுவும் அறியாத சுகமான தூக்கம். அவனுடைய விழியின் கருப்பு வட்டத்தை, பழுதான கார்னியா வெள்ளையாய் மறைத்துக்கொண்டிருப்பதைக்காட்டுகிறார் டாக்டர்.

இந்தக் கருப்பு விழி துல்லியமாய்த் தெரிகிற மாதிரி வெண் படலம் கண்ணாடி போன்று இருக்க வேண்டும். மங்கினாலும், பழுதடைந்து போனாலும் பார்வை இல்லை என்று பொருள். பையனுக்கு இரண்டு கண்களிலுமே பார்வை இல்லை. இந்த ஒட்டு வேலைக்குப் பிறகுதான் தன்னுடைய கண் என்னும் ஜன்னலின் வழியே முதன் முதலாக அவன் உலகத்தை, அதன் அழகுகளைப் பார்க்கப் போகிறான்.

பையனின் தலைக்கு மேலே பிரத்தியேகமான ஒரு மைக்ராஸ்கோப் நகர்ந்து வந்து கண்ணுக்கு மேல் மையம் கொண்டிருக்கிறது. திரவங்களால் பையனின் விழியை நன்றாய்த் துடைத்துச் சுத்தம் செய்து, 'ஸ்பெகுலம்' போட்டு விழியை அசையாமல் நிறுத்துகிறார்கள்.

இனிமேல் வேலைகள் எல்லாம் மைக்ராஸ்கோப் மூலமாகத்தான் நடைபெறப் போகிறது. எதையும் தொட்டு விடாமல், எதன் மீதும் பட்டுவிடாமல் மைக்ராஸ்கோப்பின் இரண்டாவதுபார்வை வில்லைவழியே நிகழ்ச்சிகளைக் கவனிக்க நாமும் அனுமதிக்கப்படுகிறோம். முல்லை அரும்புகள் மாதிரிப் பஞ்சு சுற்றிய மருந்துக் குச்சிகளை எடுத்துக் கண்ணைத் துடைத்து ஏற்பாடு செய்வதற்கே மிகவும் பொறுமை வேண்டும். விழிப் படலத்தை வெட்டி எடுக்கப் பயன்படுத்தியது போன்ற அதே மாதிரியான "பேனாமுடிக் கருவி" இங்கும் வருகிறது. பையனின் கருவிழிக்கு மேலே அதை அளவாக வைத்துத் திருகுகிறபோது குபுக்கென்று ரத்தம் கொப்பளிக்கிறது. அரும்புப் பஞ்சால் அதைத் துடைத்துச் சின்னதான மின்சாரக் கருவியால் விழியின் சின்னச் சின்ன ரத்தக் குழாய்களின் வெட்டப்பட்ட நுனியைத் தீய்த்துக் கருக்கி ரத்தப் பெருக்கை நிறுத்துகிறார்கள். மைக்ராஸ்கோப் வில்லைகளின் வழியே பார்க்கிறபோது, பழுதாகிப் போன கார்னியா முழு நிலா மாதிரி வட்டமாய் வெட்டப்படுவது தெரிகிறது. சின்னக் கத்தரிக்கோலால் கார்னியா வட்டத்தை வெட்டி வெளியே எடுத்தால், பளிங்குக் கருப்பாய் மின்னுகிறது விட்ரியஸ் திரவம்.

நறுக்கிய விழி வெண் படலம், சாதாரணப் பென்சில் விட்டமுடையதுதான். அதே அளவுக்குப் பையனின் கண்ணிலிருந்தும் பழுதான பகுதியை எடுத்தாகிவிட்டது. ஸ்ரீலங்காவிலிருந்து வந்த கண்ணின் வெண் படலத்தைப் பையனின் கண்ணில் நிதானமாக வைத்து, வெட்டப்பட்ட விளிம்போடு இணைத்து நெருக்கமாய்த் தையல் போடுகிறார் டாக்டர். ஒட்டடை மாதிரி கண்ணுக்கே தெரியாத அந்த இழையை வைத்துக் கொண்டு எம்பிராய்டரி பண்ணுகிற மாதிரியான லாகவத்துடன் கோத்துக் கோத்து வாங்கிச் சற்றும் பிசிறில்லாமல் தையல் போடுகிறார்.

இரண்டு மணி நேரம் போனதே தெரியவில்லை. ஸ்ரீலங்காவிலிருந்து வந்த கண் இங்கே ஒரு சிறுவனின் வாழ்க்கைக்கு ஒளி தரப் போகிறது. இன்னும் இரண்டு மாதங்களில் கட்டுக்களை அவிழ்த்துக் காயங்கள் ஆறிய பின் — இந்தப் பையன் உலகத்தை ஆசை தீரப் பார்க்கப் போகிறான்.

ஆபரேஷன் தியேட்டர்



பிறவிக் கோளாறுகள், அம்மை நோய், ஊட்டச் சத்துக் குறைவு, காயங்கள் — இவற்றால் கண்ணாடி போன்ற விழிவெண் படலம் ஒளி மங்கிப் போய்விடுகிறது. கறுப்பு வட்டம் துல்லியமாய் வெளியே தெரியாமல் மறைத்துப் பார்வை போய்விடுகிறது. கார்னியாவை வெட்டி எடுத்துப் பதியவிடுவதால் மட்டும் பார்வை மீண்டு விடுகிறதா?

நிதானமாகக் கவனிக்க வேண்டிய விஷயம் இது. கார்னியல் கிராஃப்டிங் செய்யப்பட்ட பின்னர் முறையான மருந்திடலும், தொடர் கவனிப்பும் முக்கியமானவை. சிறிதளவு அலட்சியம் ஏற்பட்டாலும் செய்ததெல்லாம் பாழாகி விடும்.

அடுத்து ஒரு பிரச்னை. என்னதான் தானமாக வந்த கண் ஆரோக்கியமானதாக இருந்தாலும், பெற்றுக் கொள்கிற மனிதனின் உடல் வாகும் முக்கியமானது. புதிய உறுப்பை ஏற்றுக் கொள்கிற ஆரோக்கியமான நிலை, ஏற்றுக் கொள்கிற மனிதருக்கு அமையாமல் போவதும் உண்டு.

கண் தானம் என்பதை எந்த வயதுக்காரரும் தரலாம். நூறு வயதுக்கு மேற்பட்டவர்களின் கண்கள்கூட நல்ல முறையில் பயன் தந்துள்ளன. பொதுவாகச் சின்ன வயதுக்காரர்களின் கண்கள், வயதானவர்களின் கண்களுக்குப் பொருத்தப் பயன்படுத்தப்படும்போது மிகச் சிறப்பான பலன் கிடைக்கும். வயதானவர்களின் கண்களைச் சிறியவர்களுக்குப் பயன்படுத்தும்போதும் நல்ல பலனே கிடைக்கிறது. சின்ன வயதுக்காரர்களின் ஆரோக்கியமான உடல் வளர்ச்சியின் வேகம் காரணமாக வெட்டி ஒட்டப்பட்ட பகுதிக்குத் தானே ஊட்டம் கிடைத்து விடுகிறது.

தானமாக வந்த கண்கள் நன்கு பரிசோதிக்கப்பட்ட பிறகே பயன்படுத்தப்படுகின்றன. புற்று நோய், நாய்க்கடி, கடுமையான தொற்று நோய்கள் இவற்றால் பாதிக்கப்பட்டு உயிரிழந்தவர்களின் கண்களைப் பொதுவாய்ப் பயன்படுத்துவதில்லை. மஞ்சள் காமாலை கண்டு இறந்தவர்களின் கண்களையும் பயன்படுத்துவதில்லை. ரத்த ஓட்டத்தில் கலந்து நோய் பரப்பக்கூடிய கிருமிகளால் ஆபத்து விளையும் என்னும் நிலையில் கண் தானம் பலன் தராது.

மற்றபடி வயது, ஆண் பெண் இனப் பாகுபாடு, ரத்த வகை போன்ற எதுவுமே இந்த மருத்துவத்துக்குத் தடையாய் இருப்பதில்லை.

சென்னைக்குப் பெரும்பாலான கண்கள் ஸ்ரீலங்காவிலிருந்தே விமானம் மூலம் வருகின்றன. உள்ளூரில் கண் தானம் தருகிறவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு. உள்ளூரிலேயே கிடைக்கும் கண்களைப் பயன்படுத்தினால் பயன் கூடுதலாக இருக்கும். ஏனெனில் ஸ்ரீலங்காவிலிருந்து விமானம் மூலம் கண் வந்து சேருவதற்கு ஆகிற கால அளவில் ஏற்படும் தாமதம் தவிர்க்கப்பட முடியும்.

''ஸ்ரீலங்காவில் பௌத்தர்களும், இங்கு ஜைனர்களும் கண் தானம் தருவதைப் பெருமையாக நினைக்கிறார்கள். எல்லாவிதமான மத நம்பிக்கைகளும் கண் தானத்துக்கு எதிரானதாய் இல்லை. இருப்பினும் நம்மவர்களிடையே இனம் புரியாத தயக்கமும் அச்சமும் நிலவுகிறது. தொடர்ந்த பிரசாரங்களின் மூலம் கண் தானம் என்னும் அறப்பணியைப்பற்றி மக்களிடையே உணர்வுகளை ஏற்படுத்த வேண்டும்'' என்கிறார் டாக்டர் மஞ்சு குல்கர்னி.

இத்துறையில் கண்ணான பணியாற்றி வரும் 'சங்கர நேத்ராலயா'வின் சேவைக்குக் கை கொடுப்பது புண்ணியம் சேர்க்கிறதோ இல்லையோ — பெருமளவில் கண்ணியத்தைச் சேர்க்கும் என்பது நிச்சயம்.

-யெஸ்பால்

---

2—7—83ம் தேதி. இடம்: மெரினா கடற்கரைச் சாலை. நேரம்: பகல் 11.30.

நான்கு ஐந்து பாதசாரிகள் சாலையைக் கடக்க முற்பட, எதிரே வேகமாக வந்த கார் ஒன்று கிறீச்சிட்டு நின்றது. பாதசாரிகள் பின்வாங்கினர். கார் கிளம்பவில்லை. காரிலிருந்தவர் கையை அசைத்தார், பாதசாரிகளைப் போகும்படி. பின்னால் வந்த போலீஸ் ஜீப்பிலிருந்து ரிசர்வ் போலீசார் சிலர் இறங்கி, சாலையைக் கடக்க முயன்ற பாதசாரிகளை அழைத்து, சாலையைக் கடந்து போகும்படி பரபரப்போடு கூறினார்கள். பாதசாரிகள் சாலையைக் கடந்த பிறகே, காரும் ஜீப்பும் புறப்பட்டுச் சென்றன. காரிலிருந்தவர் யார் தெரியுமா?

தமிழக முதல்வர் எம். ஜி. ஆர்! சென்னை விஜயத்தின்போது நேரில் கண்டவர்:

-ஆர். அரிகோபி



# வளரும் குழந்தைகளுக்குத்




**காரணம், குழந்தைகளின் விரைந்த முழுவளர்ச்சிக்கான அதிக ஊட்டச்சத்துள்ள திட உணவாகும் ஃபாரெக்ஸ்.**

1. ஃபாரெக்ஸ் புரதச் சத்து நிரம்பியதாகும் —உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு இது அத்தியாவசியமாகும்.

2. ஃபாரெக்ஸ் வேறெந்த பிராண்டு செய்யப்பட்ட திட உணவைக் காட்டிலும் அதிக இரும்புச் சத்துள்ளதாகும். இது குழந்தைக்குத் தொற்றுநோய் எதிர்ப்புச் சக்தியையும் ஆரோக்கியமான இரத்தத்தையும் அளிக்கிறது.

3. ஃபாரெக்ஸில் கால்ஷியம் மற்றும் ஃபாஸ்ஃபரஸ் சரியான விகிதத்தில் சேர்ந்திருக்கின்றன. ஆரோக்கியமான எலும்புகளையும் திடமான பற்களையும் பெற இவை உதவுகின்றன.

4. தவிர ஃபாரெக்ஸ், குழந்தையின் மென்மையான செரிக்கும் சக்திக்கேற்றவாறு விசேஷமாக முன்கூட்டியே பக்குவம் செய்யப்பட்டதாகும்.




டாக்டர்கள் சிபாரிசு செய்வது

**ஃபாரெக்ஸ்®**

வழங்குவோர் க்ளாக்ஸோ

CASGLF-42 183 TM

# என் வளர்ச்சிதானே முக்கியம்?

மெல்லிசைக் கச்சேரிகளில் ஜோடியாகப் பாடும் தம்பதிகள் என்று பார்க்கப் போனால் பம்பாயில் ஜக்ஜித் சிங் — சித்ரா, தமிழகத்தில் ஏ. எம். ராஜா — ஜிக்கி என மிகச் சில ஜோடிகளே பிரபலமாக இருக்கின்றனர். இவர்களைப் போல் 'மியூசியானோ' மூலம் பிரபலமாகியிருக்கும் ஜோடிதான் ஏ. வி. ரமணன் — உமா ரமணன்.

ரமணன் சொல்கிறார்:

''1968ம் ஆண்டு காமேஷ், ராஜாமணி, எம். பி. சீனிவாசன் ஆகியோரது இசைக் குழுக்களில் பாட ஆரம்பித்தேன். இப்படி மூன்று நான்கு குழுக்களில் பாடிக் கொண்டிருப்பதில் சில பிரச்னைகள் ஏற்படவே 1972ம் ஆண்டு சொந்தமாக 'மியூசியானோ' என்ற குழுவை நானே துவக்கி நடத்த ஆரம்பித்தேன். 'ப்ளேபாய்' என்ற ஹிந்திப் படம்தான் சினிமாவுக்குப் பிள்ளையார் சுழி போட்ட படம். தமிழைப் பொறுத்த மட்டில் 'கிருஷ்ணலீலா' படத்தில் இடம் பெற்ற 'மோகனக் கண்கள்' முதல் பாடலென்றாலும் 'மன்மத லீலை'யில் பாடிய 'நேற்றொரு மேனகை...'தான் ரசிகர்களுக்கு என்னை நன்கு அடையாளம் காட்டியது.

மலேசிய பரணிகுமார் என்ற நண்பர் 'இதயம் ஒரு கவிதை' என்ற தம் படத்துக்கு இசையமைக்கும்படி என்னைப் பணித்தார். என் இசையமைப்பில் சில பாடல்களும் பதிவு செய்யப்பட்டன. பிறகு எப்படியோ இப் படம் வேறொருவரின் தயாரிப்பாக மாறி, 'தேரோட்டம்' என்ற பெயரில் வெளியானது.

இதுவே நான் இசையமைப்பாளரான கதை. மேலும் 'சம்சாரம் என்பது வீணை' படத்துக்கும் இசை யமைத்தேன். பொதுவாகத் திரைப் படங்களில் எனக்கேற்பட்ட கசப்பான அனுபவங்கள் காரணமாக மேலும் அதில் ஈடுபடுத்திக் கொண்டு என்னை நானே காயப்படுத்திக் கொள்ள விரும்பவில்லை.

மணியன் தயாரிக்கும் ஹிந்திப் படத்தில் பாடுவதற்கு வாய்ப்புக் கேட்டு ஒரு நாள் சென்றேன். ஆனால் அவரோ, 'பார்வைக்கு அழகாக இருக்கிறாயே, நான் தயாரிக்கும் தமிழ்ப் படத்தில் நடி' என்று சொல்லி விட்டார். அடுத்த சில மணி நேரங்களில் எனக்கு ஒரு குடுமி வைத்து மேக்கப் செய்து, இயக்குநர் எம். ஏ. காஜாவிடம் அழைத்துச் சென்று விட்டனர். அவரும் ஓ.கே. சொல்லி விட்டார். சென்னை போன்ற பெரு நகர்களில் இசைக் குழு மூலம் ஓரளவு பிரபலமாக இருந்த நான் கிராமப்புற மக்களையும் சென்றடைய வேண்டுமென்றால் சினிமாவில் நடிப்பது பயனுள்ளதாக இருக்கும் என நினைத்து ஏற்றுக் கொண்டேன். எம். ஏ. காஜா இயக்கும் வேறு சில படங்களிலும் ஒப்பந்தம் செய்யப்பட்டேன். என்றாலும், 'காதல் காதல் காதல்' படத்தின் தோல்வியால் அப்படங்கள் வளரவில்லை. சினிமாவில் எனக்கேற்பட்ட தோல்விகளால் என் இசைக் குழுவோ நானோ எந்த வகையிலும் பாதிக்கப் படவில்லை என்பது நிதர்சனமான உண்மை.''

''மெல்லிசைக் கச்சேரிகளுக்கு முன்பிருந்த வரவேற்பு அதிகமாகியிருக்கிறதா? அல்லது குறைந்திருக்கிறதா?''

''பஞ்சம், வறட்சி நிலைமை போன்ற பல் வேறு காரணங்களால் பொதுவாக மக்களின் வாங்கும் சக்தி குறைந்திருக்கிறதே தவிர

○ ரமணன் தன் குடும்பத்தினருடன்...



மெல்லிசைக் கச்சேரி போன்ற பொழுது போக்கு அம்சங்களின் ஈடுபாடுகுறையவில்லை. திருமண விழாக்களில் கூடும் மக்கள் கடைசி வரை இருந்து கச்சேரியை ரசிப்பதே இதற்குச் சான்று. சென்னை சபாக்களில் இப்போதெல்லாம் ஏ. வி. போடுவதில்லை. கலைவாணர் அரங்கம், ராஜா அண்ணாமலை மன்றம் போன்ற அரங்குகளில் சமீப காலமாக மெல்லிசைக் கச்சேரிகளுக்கு இடம் தருவதில்லை. காரணம் ஆர்வமிக்க சில ரசிகர்கள் கச்சேரிக்கிடையே ஆட ஆரம்பித்து விடுகின்றனர். இருப்பினும் சென்னை போன்ற பெரு நகர்களில் மாதம் இரண்டு அல்லது மூன்று சபா நிகழ்ச்சிகளும் நடந்தி வருகிறோம். அநேகமாக அரங்கு நிறையும் அளவு கூட்டம் வருகிறது.''

''உங்கள் சாதனையாக எதைக் கருதுகிறீர்கள்?''

''சுமார் பதினைந்து வருடங்களாக இத் துறையில் இருந்தாலும் பெரிதாக எதையும் நான் சாதிக்கவில்லை. சில திருமணங்களுக்குச் செல்லும்போது சமையல் வேலைகளில் ஈடுபட்டிருப்பவர்கள் அதை ஒழுங்காகக் கவனிக்காமல் கச்சேரியில் கவனம் செலுத்துவதாக நிகழ்ச்சியை ஏற்பாடு செய்தவர் என்னிடம் குறைப்பட்டுக் கொள்வார். உப்பு, காரம் சமையலில் அதிகமாகிவிட்டால் அதற்கு யார் பொறுப்பேற்பது என்று என்னிடமே கேட்பார். சில சமயங்களில் கச்சேரி நடக்கும்போது சாப்பிட அழைத்தால் பலர் நாற்காலியை விட்டு நகரவே மாட்டார்கள். விருந்தை இரண்டாம் பட்சமாக நினைத்து இசை விருந்துக்கு முதலிடம் கொடுத்து ஆர்வமாகக் கச்சேரியைக் கேட்பார்கள். நேரம் செல்லச் செல்லக் கூட்டம் குறையும்போது எங்கள் குழுவைச் சேர்ந்த சிலரே 'கச்சேரியை முடித்து விடலாம்' என்று சொல்வார்கள். 'இப்போது இருக்கும் கூட்டம் தான் உண்மையில் கச்சேரிக்காக வந்த கூட்டம். மற்றவர்கள் சாப்பாட்டுக்கு வந்தவர்கள். நாம் இவர்களுக்காகத்தான் வாசிக்க வேண்டும்' என்று நான் சொல்வேன். இப்படிப் பட்ட ரசிகர்களைத் தேடிக் கொண்டதை நான் மிகப் பெருமையாகக் கருதுகிறேன்.''

''இத்துறையில் உங்களுக்கு ஏற்பட்டிருக்கும் இழப்புக்கள் என்று எதை யாவது சொல்ல முடியுமா?''

''இசைக் குழு ஒன்றை ஆரம்பித்துத் தொடர்ந்து நடத்தி வருவதால் தனிப்பட்ட முறையில் எனக்கு ஏராளமான இழப்புகள். நான் பாடகனாக மட்டும் இருந்திருந்தால் சினிமாவில் பின்னணி பாடி ஒரு குறிப்பிட்ட இடத்தைப் பெற்றிருக்க முடியும். இசைக் குழுவின் ரிகர்சலுக்கென நாளொன்றுக்குப் பல - மணி நேரம் செலவிட வேண்டியிருக்கிறது. இதனால் என் இதர வேலைகள் பாதிக்கப் படுகின்றன. சினிமா உலகில் இருப்பவர்களை அடிக்கடி சந்தித்துத் தொடர்பு கொள்ளவும் முடிவதில்லை. என் குழுவில் மொத்தம் 24 பேர் இருக்கிறார்கள். இவர்களில் 18 பேர் முழு நேர இசைக் கலைஞர்கள் — கச்சேரிகளை மட்டுமே நம்பி யிருப்பவர்கள். என் வளர்ச்சி தானா முக்கியம்? என்னை நம்பியிருக்கும் இவர்களது வளர்ச்சியையே முக்கியமாகக் கருதி இழப்புக்களை மகிழ்வுடன் ஏற்றுக் கொள்கிறேன்.''

''அமெரிக்காவில் சுமார் இரண்டாயிரத்துக்கும் அதிகமான மெல்லிசைக் குழுக்கள் தனிப் பாடல்களை அவர்களாகவே இயற்றி இசையமைத்துப் பாடி வருகிறார்கள். இங்கு ஏன் அத்தகைய வளர்ச்சிக்கான அறிகுறியே இல்லை?''

''பொதுவாக இந்தியாவில் பிரைவேட் ரிக்கார்டிங்ஸ்குறைவாகத்தான்இருக்கின்றன. இலங்கையில் இருக்கும் அளவுக்குக் கூட இங்கு இல்லை என்பது ஒரு கசப்பான உண்மை. சமீப காலமாக பம்பாயில் இப்படிப்பட்ட பிரைவேட் ரிக்கார்டிங்ஸ் ஆரம்பமாகியிருக்கின்றன. எனக்கும் இது போன்ற வற்றைச் செய்ய வேண்டும் என்ற ஆசை நிறையவே இருக்கிறது. சமய சந்தர்ப்பங்கள் சரியாக அமைந்தால் தரமானவற்றை என்னால் தரமுடியும். ஆனால் பொதுவாக நம் ரசிகர்கள் மெல்லிசைக் கச்சேரிகளில் சினிமாப் பாடல்களைக் கேட்கவே அதிகம் விரும்புகிறார்கள்.''

ஏ. வி. ரமணன் இப்போதெல்லாம் கோவில் கச்சேரிகள், மற்றும் திருவிழா நிகழ்ச்சிகளில் பங்கெடுத்துக் கொள்வதில்லையாம். காரணம் பக்திப் பாடல்களையும் பஜனைப் பாடல்களையும் பாடிக் கொண்டிருக்கும் சிலர், 'மெல்லிசை ஆசாமிகள் கோவில் குளத்துக்கெல்லாம் வந்து நமது வயிற்றில் அடிக்கிறார்களே!' என்ற பொருள் படப் பேசினார்களாம். தமக்குத் தெரிந்த நண்பர்களே இப்படிப் பேசிவிட்டதால், ரமணன் கோவில் நிகழ்ச்சிகளில் பங்கு பெறுவதில்லையாம்.

—பேட்டி: ராஜா செந்தில்நாதன்

**வரிசை**

எங்கள் கால்கள்
என்றைக்கும்
செய்யக் கூடியது
ஒரே காரியம்தான்.
அரிசிக்கும் சர்க்கரைக்கும்
கிரசினுக்கும்
காத்துக் கிடந்து
மிச்ச நேரத்தில்
ஒட்டுச் சாவடியில்
உற்சாகமாய் நிற்கும்!

—எஸ். வாணிசங்கர்




என் மகன் சிங்கக் குட்டி தான்!.. ஆனா அசிங்கக் குட்டியா மாறிடுவான் போலிருக்கே!


கிர்ர்ர்.. ஒழுங்கா நடந்துக்குங்க!.. இல்லேன்னு காஷ்மீர் பற்றி எரியும்!.. கிர்ர் ர்ர்
ஆணவ அரசியல்


பஞ்சாப்
அகாலி தளம்
அமைதியான போராட்டம்
பேச்சு வார்த்தை
மத்திய அரசு


ஆந்திர என்.டி.ஆர்
இறங்கி வாங்க!
பேச்சு வார்த்தை

கல்கி



1983 ஜூலை 24
ருத்ரோத்காரி ஆடி 8
மலர் : 41 இதழ் : 52



# திறமைக்குத் தண்டனை!

திருவள்ளூர் சுப்பிரமணியன் அவர்களுடைய மகள் 1200க்கு 1027 மார்க்குகள் வாங்கியிருக்கிறாள். விருப்பப் பாடங்களில் 90 சதத்துக்கு மேல் கிடைத்திருக்கிறது. மூன்று பெண்கள் கல்லூரிகளில் பி.காம் சேர விண்ணப்பித்தாள். மூன்றிலும் அவளுக்கு இடமில்லை என்று கூறிவிட்டார்கள். காரணம் அவள் முற்பட்ட வகுப்பினள் என்று முத்திரை குத்தப்பட்டதுதான். இப்படி எத்தனையோ சோகக் கதைகள். பிறவியில் ஏற்றத் தாழ்வு கிடையாது என்பதாக வாய் கிழியப் பேசிக்கொண்டே புதிதாக ஒரு தாழ்த்தப்பட்ட வகுப்பினரை உருவாக்கி வருகிறோம்.

68 சதம் இடங்கள் பிற்பட்ட வகுப்பினருக்கு ஒதுக்கப்படுவது போதாது என்று மீதமுள்ள 32 சதம் இடங்களிலும் அதிக மதிப்பெண்கள் பெற்றுள்ள பிற்பட்ட வகுப்பினருக்கு வாய்ப்புத் தரவேண்டும் என்பது தமிழக அரசின் கட்டளை. அதாவது பிற்பட்ட வகுப்பினருக்கென்று ஒதுக்கீடு செய்யப்படும் 68 சதத்தில் அதிக மதிப்பெண் பெற்றுள்ள பிற்பட்ட வகுப்பினர் இடம் பெறத் தேவையில்லை. அவர்கள் 32 சதத்தில் இடம் பிடிக்கலாம். ஆக, இன்று கல்லூரிகளில் 68 சதம் இடங்கள் குறைந்த மார்க்கு வாங்குபவர்களாலேயே நிரப்பப்படுகின்றன.

இந்த அநியாயப் போக்கு ஏராளமான இளைஞர்கள்; யுவதிகளிடையே ஏமாற்றத்தையும் கோபத்தையும் உருவாக்குவதால் விளையக்கூடிய ஆபத்து ஒருபுறமிருக்க, தேசத்தின் எதிர்காலம் என்ன ஆவது? அறிவாற்றலுக்கு உரிய மதிப்புத் தந்து பயன்படுத்திக்கொள்ளாத நாட்டின் முன்னேற்றம் ஆமை வேகத்தில்தான் இருக்கும். மாறாக, மக்களின் அறிவாற்றலைச் சமுதாயத்தின் ஒட்டுமொத்த நலனுக்குத் திறம்படப் பயன்படுத்திக் கொள்ளும் தேசம் துரிதமாக முன்னேறி, தாழ்த்தப்பட்டவர் என்ற நாமதேயமே இல்லாமல் போகுமாறு அனைவரும் வளம் பெற உதவும்.

இதைப் புரிந்து கொள்ளாததால்தான் மண்டல் கமிஷன் அறிக்கை அனைத்துத் துறைகளிலும் பிற்பட்ட வகுப்பினருக்கு இட ஒதுக்கீட்டை 80 சதமாக உயர்த்த வேண்டும் என்று சிபாரிசு செய்கிறது. ஏற்கெனவே உள்ள அநீதியை மேலும் அதிகரிக்கிற இந்த அறிக்கையை ''கொள்கை அளவில் ஏற்பதற்கில்லை'' என்று ஒரு மாநில முதல்வரேனும் துணிந்து கூறியதற்காக மகிழ்கிறோம். 39,000 வோட்டு வித்தியாசத்தில் அண்மையில் உப-தேர்தலில் வெற்றி பெற்று முதல்வராகத் தாம் நியமனமானதற்கு மக்களின் அங்கீகாரம் பெற்றுக்கொண்ட வஸந்த்ராவ் பாட்டீல்தான் அந்த முதல்வர். எதிர்ப்புக் கிளம்புவதானாலும்; தமது பிராபல்யம் குறைவதானாலும் நீதியை எடுத்துச் சொல்லத் தயங்காத மகாராஷ்டிர முதல்வரை வாழ்த்துகிறோம்.

திறமையை எங்கு காண்கினும் அதற்கு ஊக்கமளித்து வளர்ப்பதே உலகெங்கும் அனைத்து நாடுகளிலும் காணப்படும் நடைமுறை. இந்தியாவில் மட்டும்தான் துரதிர்ஷ்டவசமாக ஆற்றல் அவமானப்படுத்தப்படுகிறது. நான்கு தலைமுறைகளுக்கு முன்பு நடந்ததாகக் கருதப்படும் காரியங்களுக்கு இன்றைய இளைஞர்கள் பழி வாங்கப்படும் பரிதாபம் தொடர்கிறது.

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

''பறவைகள் இறகுகளை வளர்க்கிறது பறக்கறதுக்காக இல்லே, பத்மா. உன்னோட மென்மையை உலகத்துக்கு உணர்த்தறதுக்காக''

## 15

எப்போது விடியும் என்று நள்ளிரவிலிருந்து உறங்காமல் புரண்டு கொண்டிருந்த பத்மா வானத்தில் வெளிச்சம் படர்வதற்கு முன்பே எழுந்தாள். கிளர்ச்சியடைந்திருந்த அவளுடைய மனத்தில் மகிழ்ச்சியும் பரபரப்பும் கலந்த உற்சாகத் துள்ளல்.

முன் தினம் எடுத்ததைப் போல் இரு மடங்கு பற்பசையை 'பிரஷ்'ஷில் அள்ளி, பல் வரிசையைப் பளபளப்பாக்குவதில் இருபது நிமிடங்களைச் செலவழித்தாள். குளித்து நிறைய சோப் கரைத்து விட்டு வெளியே வாசனையாக வந்தாள்.

காப்பியை அவளுடைய அறைக்குள்ளே எடுத்து வந்த சித்தி, அவள் புறப்பட்டுக் கொண்டிருந்ததைப் பார்த்துவிட்டு, ''இன்னிக்கு காலேஜுக்குப் போகணுமாம்மா?'' என்று கேட்டாள்.

''ஆமா சித்தி. கொஞ்சம் வேலே இருக்கு.''

''இட்லி ரெடியாயிடுச்சு. சாப்பிடாமப் போயிடாதே.''

''இப்போ போகல்லே சித்தி. பத்து மணிக்கு மேலேதான்.''

''பத்து மணிக்குப் போறதுக்கா இப்பவே புறப்படறே?'' என்று கேட்டுக் கொண்டே சித்தி வெளியேறினாள்.

டெய்சி வெகு நாட்களுக்கு முன் பரிசளித்த அயல் நாட்டு யார்ட்லி பவுடர் டின்னை முதல் முதலாகத் திறந்தாள். சித்தி வாங்கித் தந்த புடவைகளில், மயில் கழுத்து நிற ஷிஃபான் புடவையையும் அதே நிற பாலிவெஸ்டர் ப்ளவ்சையும் தேர்ந்தெடுத்தாள். விழிகளுக்குக் கவனமாக மையினால் விளிம்பு தீட்டி, நெற்றிக்குப் புடவையின் டார்க்காய்ஸ் நீல நிறத்தில் இட்டுக் கொண்டாள்.

இப்படி பத்மா தன்னை அலங்கரித்துக்கொள்வது அவள் வாழ்க்கையிலேயே அதுதான் முதல் தடவை.

சவீதா



# நெஞ்சுமுள்ள வான்சுடரே

சித்தப்பா வாங்கித் தந்திருந்த புதிய எச். எம். டி. கைக் கடிகாரத்தைக் கட்டிக் கொண்டு கரத்தை முகம் பார்க்கும் கண்ணாடிக்கு எதிரே அசைத்தும் புரட்டியும் பார்த்தாள்.

சூடான இட்லியின் ஓரத்தைக் கிள்ளித் தக்காளி சட்னியில் தோய்த்த போது அறைக்குள்ளே வந்த சித்தி, ''இனிமே நீ காது கழுத்தை யெல்லாம் மொட்டையா வச்சுக்கக் கூடாதும்மா'' என்றாள். ''சாப்பிட்டு இதையெல்லாம் போட்டுக்கோ'' என்றாள்.

''வேண்டாம் சித்தி. காலேஜுக்குத்தானே போறேன்.''

''எப்ப வேணாலும் போட்டுக்கோ. இனிமே இதெல்லாம் உனக்குத்தான். சித்தப்பா குடுக்கச் சொல்லிட்டாரு.''

பத்மா அவசர அவசரமாக இட்லிகளை விழுங்கிக் கையைக் கழுவி விட்டு சித்தி படுக்கை மீது வைத்துவிட்டுப் போன மெல்லிய கோதுமைச் சங்கிலியையும், சூரியகாந்தி வடிவத்தில் இருந்த கம்மல்களையும் எடுத்தாள். இடக் கரத்தில் கைக் கடிகாரம் இருந்ததால் நான்கு வளையல்களையும் வலக் கரத்தில் கோத்துக் கொண்டாள்.



சித்தி — சித்தப்பாவிடம் விடை பெற்ற போது, ''எம்பொண்ணு இப்பத்தான் லேடி டாக்டர் மாதிரி இருக்கா'' என்றாள் சித்தி.

படிக்கட்டில் இறங்கித் தெருமுனை வரை சென்ற பத்மாவுக்குக் கைக்குட்டையின் நினைவு வரவே மறுபடியும் வீட்டுக்குத் திரும்பினாள். படியில் கால் வைத்தபோது உள்ளே சித்தியின் குரல் கேட்டது.

''மூக்குவடிச்சிக்கிட்டிருந்தவளை அன்னிக்கு நான் ரயில்ல தூக்கிப் போட்டுக்கிட்டு வந்தப்ப இப்படி டாக்டராவான்னு நினைச்சீங்களா?''

''என்னமோ நீதான் அவளை டாக்டராக்கிட்ட மாதிரிப் பெருமை அடிச்சுக்கிறியே. அவ கஷ்டப்பட்டா, படிச்சா. பணம் செலவு பண்றதுக்கு ஒரு பத்திரிகைக்காரம்மா கிடைச்சாங்க.''

''எப்படியோ... யாரு பத்மாவா? இன்னும் போகலியா நீ? இவ்வளவு நேரம் உள்ளயா இருந்தே?''

''இல்லே சித்தி. கைக்குட்டை வெச்சுட்டுப் போயிட்டேன்.''

ஆயிரம் விளக்கிலிருந்து அமெரிக்கத் தூதரகம் வரை நடந்தாள். சின்ன மழைக்குப் பிறகு நகரம் தங்க மயமாகத் தன்னைப் புதுப்பித்துக் கொண்டிருந்தது. 'சிலுசிலு'வென்று வீசிய காற்றில் யார்ட்லி பவுடரின் மணம் அவளையே சுற்றிச் சுழல மனத்தில் கவலைகள் மோதின. மருத்துவப் படிப்புடன் போராடி முடித்த ஆறாண்டு காலத்தை எண்ணிப் பார்த்து ஒருவித சோகம் கலந்த வெற்றிப் பெருமிதத்தில் திளைத்தாள்.

சாலையைக் கடந்தாள். 'ட்ரைவ்—இன்' வாசலில் பூ விற்றுக் கொண்டிருந்தவளை நோக்கி நடந்தாள். நெருக்கமாகத் தொடுக்கப்பட்டிருந்த ஜாதி மல்லிகைச் சரத்தில் ஒரு முழம் வாங்கி ஒற்றைப் பின்னலுக்கு மேலே சூடிக் கொண்டாள். ''ரெண்டு முழம் இலையிலே கட்டிக் குடு.''

லஸ் திருப்பத்தில் பஸ்ஸை விட்டு இறங்கி 12-பி பிடித்தாள். சாந்தோமில் இறங்கிக் கடற்கரையை நோக்கிச் சென்ற தெருவில் நடந்தாள். பல நாட்களுக்கு முன் அதே வழியில் ராமுடன் காரில் சென்றது அவள் நினைவுக்கு வந்தது. அப்போது தெரு நிறைய விளையாடிக் கொண்டிருந்த அழுக்குச் சிறுவர்கள் இப்போது வெய்யில் நேரமாதலால் காணப்படவில்லை. அன்று எப்படி அவ்வளவு மோசமாக உடை அணிந்து கொண்டு ராமுடன் துணிச்சலாகக் காரில் அமர்ந்து வந்தேன்!

ராமின் பங்களா நெருங்க நெருங்க பயமும் படபடப்பும் அதிகரித்தன. ராமின் பெற்றோர் இப்போது எப்படி வரவேற்பார்கள்?

தோட்டக்காரன் ஓடிவந்து ''வாங்கம்மா'' என்று 'கேட்'டைத் திறந்து விட்டான். ''ஐயா உள்ளே இருக்காரு. மாடியில இருக்காரு. போங்க.''

''யாரு?''

''ராம் ஐயா. காலையிலதான் வந்தாரு.''

''அப்பா அம்மா?''

''ஞாத்திக்கெழமைதான் அவுங்க வருவாங்க''

ஹாலைக் கடந்து மாடிப் படியில் ஏறினாள். சந்தோஷத்தால் அவள் மனம் திக்குமுக்காடியது. ராம் எப்படி இருப்பார்? இளைத்திருப்பாரா? ஒரு சுற்றுக் கனத்திருப்பாரா? இரண்டு மாத இடைவெளி அவர் தோற்றத்தில் என்ன மாற்றங்களைச் செய்திருக்கும்?

பைஜாமா, ஜிப்பா அணிந்திருந்த ராம் தலை வாரிக் கொண்டிருந்தான். அறைக்குள்ளே பத்மா நீல மலர் போல நுழைந்ததை நிலைக் கண்ணாடியில் பார்த்தவன் ஆச்சரியத்துடன் திரும்பி எழுந்தான். அவள் அமைதிப் புன்னகையுடன் அவனையே பார்த்து நின்றாள்.

வேகமான சில விநாடிகளுக்குப் பிறகு பத்மா சுயநினைவுக்கு வந்தவளாய்க் கதகதப்பான ராமின் தழுவலிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டாள்.

''ஏன் அழறே?'' என்றான் ராம். அவள் கரத்திலிருந்த கைக்குட்டையைப் பறித்து, அவளுடைய கன்னங்களைத் துடைத்தான்.

கண்ணாடிச் சுவருக்கு வெளியே தொலைவில் பச்சை நிற அலைகளுக்கு மேலே கடற்பறவைகள் வெயிலில் சிறகடித்துக் கும்மாளமிட்டன. பத்மா அந்தப் பறவைகளைப் பார்த்தாள். ராமின்பக்கம் திரும்பித் தன் 'கடல் நீல' விழிகளை முழுமையாகத் திறந்து அவன் முகத்தைப் பார்த்தாள். ''என்ன யோசிக்கிறீங்க?''

''பறவைகள் இறகுகளை வளர்க்கறது பறக்கறதுக்காக இல்லே, பத்மா''

''அப்புறம்?''

''உன்னோட மென்மையை உலகத்துக்கு உணர்த்தறதுக்காக.''

''டாக்டர் திடீர்னு கவிஞர் ஆயிடறார், ஸ்போர்ட்ஸ்மேன் ஆகிறார். இன்ஜினியர் டைரக்டர் ஆகிறார். அப்புறம்...''

'எப்போ கணவர் ஆகிறார்?' என்று சுப்பையா நடுவே தோன்றிக்கேட்பதைப்போன்ற பிரமை பத்மாவுக்கு. 'களுக்'கென்று சிரித்தாள்.

''ஏன் சிரிச்சே?''

''ஒண்ணுமில்லே... அம்மா அப்பா வரலையா?''

''பூ அம்மாவுக்குத்தான் வாங்கிட்டு வந்தியா?''

''ம்.''

''ஸண்டே வர்றாங்க.''

''லீவெல்லாம் எப்படிப் போச்சு?''

''ரொம்ப போரடிச்சிருக்கும், உன்கிட்டேருந்து லெட்டர்ஸ் வராம இருந்திருந்தா... நீ என்ன பண்ணினே?''

''அதான் எழுதியிருந்தேனே. பிரிட்டிஷ் கவுன்சில், சாப்பாடு, தூக்கம், யு. எஸ். ஐ. எஸ், சாப்பாடு, தூக்கம்.''

ஃப்ரிட்ஜிலிருந்து குளிர்பானங்களை எடுத்து வந்த ராம், ''அட்வான்ஸ் கங்கிராஜுலேஷன்ஸ் பத்மா'' என்றான்.

''எதுக்கு?''

''நீ இந்த வருஷத்து பெஸ்ட் அவுட் கோயிங் ஸ்டூடண்ட் ஆகப் போகிறதுக்கு.''

''அஸ்ட்ராலஜிகூட உங்களுக்குத் தெரியும் போல இருக்கே'' என்று சொல்லிவிட்டுச் சிரித்தாள். ''அந்தக் கௌரவம் உங்களுக்குக் கிடைச்சாத்தான் நான் சந்தோஷப்படுவேன்'' என்றாள்.

'பெஸ்ட் அவுட் கோயிங் ஸ்டூடண்ட்' என்ற பெருமை தனக்குக் கிடைக்காவிட்டால் தனக்கு அடுத்தபடியாக அதிக மதிப்பெண்களைப் பெற்று வரும் ராமிற்குத்தான் கிடைக்கும் என்று பத்மாவுக்கு உறுதியாகத் தெரியும். எனவே, ராம், 'பெஸ்ட் அவுட் கோயிங்' ஸ்டூடண்ட்' ஆகவேண்டும் என்ற ஆசையில் பத்மா ஏரவில் அலட்சியமாகப் பதில் சொன்னது ராமிற்கு மட்டுமல்ல, யாருக்குமே தெரியாது.

## கண் பார்வையற்றவர்கள் புஸ்தகங்கள் படிக்கலாம்!

இதுவரையில் கண் பார்வையற்றவர்கள் படிக்க 'ப்ரெய்ல்' என்னும் விசேஷ முறையில் அச்சடிக்கப்பட்ட புஸ்தகங்கள் வெளியிடப்பட்டு வந்தன. இப்பொழுது அவர்கள் சாதாரணமாக அச்சடிக்கப்பட்ட புஸ்தகங்களையும் படிக்க இயலும். இதற்கு உதவுவது 'ஸ்பீச் ஸிந்தஸிஸ்' என்னும் முறை. இம்முறை வரி வடிவத்தை ஒலி வடிவமாக மாற்றுகிறது. இம்முறையை உபயோகப்படுத்தி மைக்ரோ கம்ப்யூட்டருடன் இணைக்கப்பட்ட 'க்ரஸ்வெய்ல் ரீடிங் மெஷின்' இயங்குகிறது. சாதாரணக் காகிதத்தில் அச்சடிக்கப்பட்ட அல்லது டைப் செய்யப்பட்ட விஷயங்களை இந்த மெஷினில் உள்ள காமிரா கிரகித்து அவைகளை ஸ்பீச் ஸிந்தஸைஸருக்கு 'ஊட்டி' சப்தமாக மாற்றும். இது புஸ்தகத்தை ஒருவர் உரக்கப் படிப்பது போல் அமைகிறது.

தகவல்: ரிஸர்ச் அண்ட் ரெஃபரன்ஸ்



# நான் தேர்ந்தெடுப்பது!

கோ ஆப்டெக்ஸ்
பாலியஸ்டர்
சேலைகளே!

நூற்றுக்கணக்கான நூதன
ரகங்கள் என்முன்னே! எதை
நான் தேர்ந்தெடுப்பேன?
எல்லாமே எழிலின் வார்ப்புகள்!
எப்படியோ ஒன்றை எடுத்து
விட்டேன் அப்பப்பா
எனக்குள்ளே எத்தனை ஆனந்தம்
தெரியுமா?

கோ-ஆப்டெக்ஸ்

DIPR 444 87 ELEGANT

# படமும் பாடலும் — போட்டி - முடிவு

இந்தப் போட்டியில் நாலு படங்களையும் நாலு பாடல்களையும் சரியான முறையில் பொருந்தி எழுதியவர்கள் 53 பேர்கள். இவர்களில் குலுக்கல் முறையில் 10 பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு அவர்களுக்குத் தலா ரூ. 25/- பரிசு அனுப்பப்படுகிறது.

1. கே. வி. மௌலி,
   26, விலர் ரோடு எக்ஸ்டென்ஷன்,
   ஸெயிண்ட் தாமஸ் டவுன்,
   பெங்களூர்-560—084.

2. இரா. மாலதி,
   57, கோபாலசமுத்திரம்,
   தெற்கு வீதி
   மன்னார்குடி-614—012.

3. பி. தானிஜா,
   45, பஸ்ஸி தெரு,
   பாண்டிச்சேரி-605—001.

4. என். எஸ். லலிதா,
   8/1, விஸ்வநாத நகர்,
   கே. புதூர், மதுரை-7.

5. வி. கமல லதா,
   64, ஒப்பணக்காரத் தெரு,
   கோயமுத்தூர்-1.

6. ஜி. சாந்தா,
   மே/பா ஜி. ராஜகோபாலன்,
   21, ஒன்பத்து வேலி அக்ரஹாரம்,
   திருக்காட்டுப்பள்ளி.

7. முத்துலட்சுமி கதிர்வேல்,
   89, பார்க் ரோடு,
   ஈரோடு--1 638—001.

8. கே. சேகர்,
   64, பெருமாள் கோயில் வீதி,
   காரைக்கால்-609—602.

9. டி. எஸ். சுந்தரராஜன்,
   7, 8/1, காளியண்ணக் கவுண்டர் தெரு,
   இருகூர் போஸ்ட்,
   கோவை மா. வ. 641—103.

10. எஸ். இம்மி,
    நியூ லாட்ஜ்,
    817, ஜங்ஷன் ரோடு,
    விருத்தாசலம்-606—001.

''சித்தி சித்தப்பா எப்படி இருக்காங்க? அதைச் சாப்பிடு.''

''ஓ.கே.''

''என்னிக்கு அவுங்களை எனக்கு இன்ட்ரட்யூஸ் பண்ணி வைக்கப் போறே?''

பத்மா புன்னகை செய்தாள். ''ஹவுஸ் சர்ஜன்சி முடிச்சப்புறம்.''

''பயப்படாதே. நீ அழைக்காம நான் உன் வீட்டுக்கு வரமாட்டேன்.''

பிற்பகல் இரண்டு மணி வரை பேச்சிலும் சிரிப்பிலும் பொழுது கழிந்தது.

ராம் ரோலிங் ஸ்டோன்ஸ், பாப் டைலான், ஜான் லென்னன் வரிகளைச் சொன்னான். பத்மா 'ஹார்ட் பிளாக்' பற்றி விவாதித்தாள். டெய்சியும், சுப்பையாவும், டாக்டர் மிஸஸ் உமா பரமேஸ்வரனும் அலசப்பட்டனர். கொடைக்கானல் ப்ளம்ஸ் பழம் பற்றியும், ஹவுஸ் சர்ஜன்ஸ் குவார்ட்டர்ஸ் கொசுக்களைப் பற்றியும் பேசியபடி ராம் மலையிலிருந்து கொண்டு வந்திருந்த வால்பேரியை நறுக்கி பத்மாவின் இதழருகே பிடித்தான்.

கீழே இறங்கினர். மேஜை மீது சாப்பாடு பரிமாறப்பட்டுக் காத்திருந்தது.

''உட்லண்ட்ஸா, மாரிஸா?'' என்று வேலுவிடம் ராம் கேட்டான்.

''எதுக்கு இப்படி வாங்கி வேஸ்ட் பண்றீங்க?'' என்றாள் பத்மா.

''சாப்பிடறது வேஸ்டா?''

''எனக்கு சாதம், தயிர், ஊறுகாய் போதும். ஸ்வீட், சிப்ஸ், காஷ்யூநட் உங்களுக்கு.''

''நீ மட்டும் உடம்பை ஸ்லிம்மா பாதுகாத்துக்கலாம்னு பார்க்கிறியா? அது நடக்காது.''

''நீங்க சும்மா இருங்கய்யா. இலையைக் காலி பண்ணும அம்மாவை எழுந்திருக்க விட மாட்டேன்'' என்றான் வேலு.

''பாத்தியா! எப்படி நம்ம ஆளு? சாப்பிட்டதும் உனக்கு ஒரு சர்ப்ரைஸ் மாடில காத்திருக்கு.''

''என்ன சொல்லுங்க.''

''முதல்ல இலையைக் காலி பண்ணு. அப்புறம் சொல்றேன்.''

''இதெல்லாம் வேண்டாம் ராம். ப்ளீஸ். என்னால இப்படிச் சாப்பிடவே முடியாது.''

''சரி. முடிஞ்சவரைக்கும் சாப்பிடு.''

சாப்பாட்டை முடித்து விட்டு மறுபடியும் இருவரும் மாடிக்குச் சென்றனர். ராம் சூட் கேஸைத் திறந்தான். ஒரு அட்டைப் பெட்டியை எடுத்து அவள் முன்னே வைத்தான்.

''என்ன இது?''

''திறந்து பார். உனக்குத்தான்.''

உள்ளே ஜீன்ஸும் அழகிய ஸ்லீவ்ஸ் மேல் சட்டையும் இருந்தன.

''எனக்கா?''

''ரெண்டு பேரும் பைக்ல அடையாறு பீச் போறோம். நீ இந்த ட்ரெஸ்ல பைக்ல எனக்குப் பின்னாலே உட்கார்ந்துக்கிட்டு வரப் போறே.''

பத்மாவுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. (தொடரும்)


சிவசங்கரி
எழுதும்
மாலையில் பூக்கும்
மலர்கள் புதிய தொடர்கதை
கல்கி 1 ஆகஸ்ட் ஆண்டுமலரில்
ஆரம்பம்

வீட்டில் ஒரு முறை படித்த அத்தையின் கடிதத்தை அவன் ஆற்றங்கரை மணற்பரப்பில் உட்கார்ந்து மறுபடி படித்தான்.

சிரஞ்சீவி கார்த்திக்கிற்கு,

அநேக ஆசீர்வாதங்கள். உன் கடிதம் கிடைத்தது.

ராமமூர்த்தி வீட்டிலிருந்து உனக்குச் சாப்பாடு கிடைத்து விடுவதைக் கேட்டு சந்தோஷம்.

மன்னியைத் தாரா டாக்டரிடம் அழைத்துப் போகிறாள். தினம் ஒரு பரிசோதனை நடக்கிறது. இன்னும் ஒரு வாரத்தில் என்ன வியாதி என்று நிச்சயமாய்ச் சொல்வார்களாம். பெரிய வியாதி ஒன்றும் இல்லாமல் இருக்க வேண்டுமே என்று முருகனைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்.

நீ எப்பொழுது வருகிறாய்? குழந்தையின் பிறந்த நாள் வேறு நெருங்கிக் கொண்டிருக்கிறது. சீக்கிரம் வந்துவிடுவாய் என்று நம்புகிறேன்.

நீ இங்கில்லாத குறையைத் தாரா தீர்க்கிறாள். தினமும் வந்து மன்னியை ஆஸ்பத்திரிக்கு அழைத்துக் கொண்டு போய்ப் பரிவாய்க் கவனித்துக் கொள்வதைப் பார்த்து அண்ணாவே கனிந்து போய்விட்டான். புத்திசாலித்தனமும் நல்ல மனகம் கொண்ட அபூர்வமான பெண்.

சீக்கிரம் வந்து சேர். —அத்தை.

பலவிதமான உணர்ச்சிகள் அவனுள் விம்மி எழுந்தன. அத்தையின் மனத்தில் ஏதோ அனுமானம். அதனால்தான் தாராவைப் பற்றி வலிய ஒரு பாரா எழுதிப் புகழ்ந்திருக்கிறாள் என்று தோன்றிற்று. தாரா எதையும் சொல்லியிருக்க மாட்டாள். எப்படிச் சொல்லுவாள்?

'புத்திசாலித் தனமும் நல்ல மனகம் கொண்ட அபூர்வமான பெண்.'

இப்பொழுது கிளம்பியிருக்கும் பிரச்னையைப் பற்றித் தெரிந்தால் அத்தை என்ன சொல்லப் போகிறாள்? பழமையிலும் ஆசாரத்திலும் ஊறிப்போன அத்தை?

'சீக்கிரம் வந்து சேர்.'

கட்டளையாகவும் இருந்தது. கவலையும் தொனித்தது. அம்மாவின் உடல் நிலையைப் பற்றிய கவலை அதில் அதிகம் என்று தோன்றிற்று.

இதுநாள்வரை தலைவலி என்று கூடச் சொல்லாத அம்மாவுக்கு என்ன உடம்பாக இருக்கும் என்று அவனுக்குத் திகைப்பும் கவலையும் ஏற்பட்டது.

# ஒரு சங்கமத்தைத் தேடி..



அம்மாவைப் பற்றி நினைக்க நினைக்க ஒரு கனிவு சுரந்தது. அப்பாவின் நிழலாய், எந்த விதத் தனிப்பட்ட சிந்தனையும் அவசியமில்லை என்று நினைத்தவள் போல் ஒதுங்கியே வாழ்ந்தவள். அவளுக்குள் ஏதேனும் ஏக்கங்கள் இருக்குமா, தாபங்கள் இருக்குமா என்று யாருக்கும் தெரியாது. வாழ்க்கையுடன் ஒட்டாமல் அதன் விளிம்பிலேயே நிற்பது எப்படிச் சாத்தியம்?

அத்தையைப் போல், தாராவைப் போல் லக்ஷ்மியைப் போல் மனத்தில் தோன்றும் எண்ணங்களுக்கு வார்த்தைகளால் வடிவம் கொடுக்க அம்மா-வுக்குத் தெரியாது.

அவளே இப்பொழுது தனக்கு உடம்பு முடியவில்லை என்று சொல்கிறாள் என்றால் நிச்சயமாய் ஏதோ கோளாறு இருக்க வேண்டும் என்று நினைக்க நினைக்கக் கவலை அதிகரித்தது. அம்மாவுக்கு உடம்பு சரியில்லை என்று ரொம்ப முன்பே தெரிந்தும் தான் இங்கு கிளம்பி வந்ததும், சுய சிந்தனையிலும் சுய பச்சாதாபத்திலும் கரைந்து கொண்டிருப்பதும் எந்த வகையில் நியாயம் என்று மனசு குறுகுறுத்தது.

'குழந்தையின் பிறந்த நாள் வேறு நெருங்கிக் கொண்டிருக்கிறது.'

வட்டத்துக்குள் எத்தனை வட்டங்கள்! ஒன்றில் நுழைந்தால் மற்றதிலிருந்து எப்படித் தப்பிக்க முடியும்?

ஜனசந்தடியற்ற அந்த இடத்தில் உட்கார்ந்தபடி அமைதியாக ஓடும் நதியைப் பார்க்க முடிந்தது. அந்தத் தருணத்தில் கடந்துபோன காலமும், நிகழ்ந்துபோன சம்பவங்களும் எல்லாமே பிரமையாகத் தோன்றின. ஏன், எதற்கு, எதனால் என்கிற கேள்விகள் அந்தரத்தில் நின்றன. நடக்கிற காரியங்கள் எல்லாம் பிரத்தியேகக் காரணங்களால் என்றால், காரணமும் காரியமும் ஒரு சுழற்சி என்றால், என்றால் அதை வசப்படுத்த முடியுமா? தடுக்க முடியுமா? நிறுத்த முடியுமா? எதுவும் சாதிக்க முடியாத நிலையில் என்ன செய்ய வேண்டும்?

ஏற்றுக்கொள்ள வேண்டும்....

அது சாத்தியமா?

''என்ன யோசனை?''

வாஸந்தி



கார்த்திக் சட்டென்று சுயநினைவுக்கு வந்து சிநேகிதச் சிரிப்போடு வந்து உட்கார்ந்த நாச்சாமியைப் பார்த்துப் புன்னகைத்தான்.

''மனுஷன்னு யோசனை இருக்காதா? முழிச்சிண்டிருக்கிற நேரமெல்லாம் யோசனை தான்.''

நாச்சாமி ஒரு வெற்றுப் பார்வை பார்த்தான்.

''நான் யோசனையே பண்ண மாட்டேன்!''

கார்த்திக் சிரித்தான்.

''டிஸ்கார்டேங்கற (Descartes) தத்துவ மேதைக்குச் சந்தேகம் வந்தது. 'நா இருக்கேன் என்கிறது எப்படி நிச்சயம்னு' கேட்டுண்டான். அப்புறம் அதுக்கு விளக்கம் கொடுத்துண்டான்' I Think; therafcre I exist!' அப்படின்னுன். நீ யோசனை பண்ணலேன்னு நீ என்கிறதே ஒரு பொய்!''

நாச்சாமி பதில் ஏதும் சொல்லாமல் ஆகாசத்தைப் பார்த்தான். பிறகு அவனைப் பார்த்துச் சிரித்து, ''நான் இப்படி விளக்கம் சொல்றேன்'' என்றான்.

''நீ ஜீவிக்கிறே, அதனுலே செத்துக்கிறே; நா ஜீவிக்கவே இல்லே, அதனுலே யோசனைகள் இல்லே!''

கார்த்திக் வியப்புடன் அவனைப் பார்த்தான். அந்தச் சிரிப்பில் இருந்த வெறுமையைப் பார்த்துப் பரிதாபம் ஏற்பட்டது.

''ஏன் அப்படிச் சொல்றே நாச்சாமி? உனக்கென்ன குறைச்சல்?''

''ச்சு!'' என்றான் நாச்சாமி அலுப்புடன்.

''பசிக்கிறபோது சாப்பிடறதும், தூக்கம் வரும்போது தூங்கறதும் — ஆடு மாடு கூடத்தான் செய்யறது!''

கார்த்திக் மௌனமாய் நதியைப் பார்த்தான். வித்தியாசமாய் இருக்க முயன்று நான் என்னத்தைக் கண்டேன் என்று நினைத்துக் கொண்டான்.

''என் மேலதான் தப்பு. படிக்க வேண்டிய வயசிலே படிப்பிலே புத்தி போகல்லே. வரவர எனக்கு என்ன தோணறது தெரியுமோ, பாரம்பரியம்கறது ரொம்ப முக்கியம். 'நான் என்ன காவாலித்தனம் பண்ணிட்டேன், என் அப்பன் பண்ணினதைத்தானே நானும் பண்றேன்' என்கிற திமிரு இருந்தது அப்ப. நாளைக்கு என் பிள்ளையும் அதையே தான் சொல்லுவான்னு பயமா இருக்கு இப்ப!''

இதே எண்ணம் தனக்குத் தோன்றியது நினைவுக்கு வர அவனுக்கு இலேசாக மனசு அதிர்ந்தது.

''உன்னைப் பார்க்கறச்சே என்னுடைய எண்ணம் ஊர்ஜிதமாகிறது. நீ இப்படி ஒழுங்கா இப்ப நல்ல பதவியிலே இருக்கறதுக்குக் காரணம் உன்னுடைய பாரம்பரியம், உங்கப்பாவுடைய ஒழுக்கம், வீட்டிலே இருக்கிற கட்டுப்பாடு...''

அடிவயிற்றிலே ஒரு சங்கடம் கிளம்பிற்று. அவன் சிரித்துக் கொண்டே எழுந்தான்.

''இதுக்கெல்லாம் காரண காரியத்தை ஆராயறது கஷ்டம் நாச்சாமி. அவனவனுக்குச் சரியான சமயத்தில் சரியான யோசனைத் திறன் இருக்கணும். அதுதான் முக்கியம். யோசிக்காம நழுவ விட்ட நேரத்துக்கு யாரையும் தப்புச்சொல்ல முடியாது.''

நாச்சாமி தொங்கிய முகத்துடன் நடப்பதைப் பார்க்கப் பாவமாக இருந்தது. அவன் முதுகைத் தட்டி, ''கவலைப்படாதே நாச்சாமி'' என்றான்.

''உன் பிள்ளையை ஆரம்பத்திலேயே நல்ல பள்ளிக்கூடத்திலே போடு. நன்னு வருவான்! உங்கப்பா எங்கே, நான் பார்க்கவேயில்லையே?''

''அவர் போயி ஒரு வருஷமாறதே? கொஞ்சமா ஆட்டம் போட்டார்? எத்தனை நாளைக்கு உடம்பு தாக்குப் பிடிக்கும்?'' குரலிலிருந்த கசப்பு அடிவயிற்றைக் கலக்கியது. இந்தக் கசப்பு தன் பிள்ளைக்கும் போகும் என்று இவன் கவலைப்படுகிருன்!

அவனிடமிருந்து விடுபட்டு வீடு போய்ச் சேர்ந்தபோது தூக்கி வாரிப் போட்டது.

திண்ணையில் அத்தை உட்கார்ந்திருந்தாள். காரணம் புரியாமல் மனசு கலங்கிற்று.

''என்ன அத்தை திடீர்னு? இன்னிக்குத்தானே உங்ககிட்டேந்து கடிதாசு வந்தது? நீங்க வர்றதைப் பத்தி ஒண்ணும் எழுதல்லியே?''

அவன் பேசிக் கொண்டே பூட்டைத் திறந்தான்.

அத்தை உள்ளே நுழைந்தபடி சொன்னாள், ''தானே 'திடீர்னு நினைச்சண்டு கிளம்பினேன்.''

''என்ன விஷயம்?''

''உன்னைக் கையோட கூட்டிண்டு போகலாம்னு வந்தேன். மன்னிக்கு ரொம்பத் தள்ளலே. உன்னைப் பார்க்கணும்கறு.''

அவன் குழப்பத்துடன் அவளைப் பார்த்தான். ''கடிதாசிலே எழுதிருப் போருதா அத்தே. நீங்க எதுக்கு வரணும்?''

அத்தையின் முகத்தில் ஒரு சோர்வு தெரிந்தது. ''லெட்டர்லே எழுதியோ தந்தி அடிச்சோ உன்னைப் பயமுறுத்த எனக்கு இஷ்டமில்லே!''

அவன் கலவரத்துடன் அவளைப்பார்த்தான்.

கோடைக்கானல் ஸ்டேஷனில் கூடைகளில் பழம் விற்பனை செய்யும் சில வியாபாரிகள் பாலிதின் பைகளில் முந்திரிப் பழங்களை அடைத்து விற்பனை செய்கிறார்கள்.

நான் பத்து ரூபாய்க்கு வாங்கிக் கொண்டு போய்த் திருநெல்வேலியில் திறந்து பார்க்கும்போது வெளிப் பார்வைக்குக் கொஞ்சம் நல்ல பழங்களை (அதுவும் புளிப்பு) வைத்து உட் பக்கம் பழுக்காத பிஞ்சுக் காய்களையும் அழுகிய பழங்களையும் வைத்திருப்பது தெரிந்தது!

—சண்முகவடிவு இளங்கோவன்



''அம்மாவுக்கு என்ன உடம்பு அத்தை?'' என்றான் மெல்லிய குரலில்.

அத்தை முற்றத்துத் தொட்டியிலிருந்த நீரை மொண்டு மொண்டு முகத்தையும் கைகாலையும் கழுவிக் கொண்டு வந்தாள்.

நிதானமாகக் ''கான்ஸர்'' என்றாள். அவன் அதிர்ந்து போனான்.

''கான்ஸரா?''

'' ஆமாம். கர்ப்பப் பையிலே!''

''டாக்டர் என்ன சொல்றார்?''

அத்தை உதட்டைப் பிதுக்கினாள். ''ரொம்பத் தாமதமா வந்துட்டேள்ங்கறார்!''

''அப்படீன்னா?''

அத்தையின் கண்கள் சட்டென்று கலங்கின. சன்னத்தில் வழிய ஆரம்பித்ததைத் துடைத்துக் கொண்டாள்.

''இனிமேல் நாள் கணக்குத்தான். அதிகப்படியா ஒரு மாசம்!''

''என்னத்தே இது?''

காரணம் புரியாத குற்ற உணர்வு நமைச்சல் எடுத்தது.

''என்ன செய்யறது சொல்லு? அவாவா கர்மாவை அனுபவிச்சுத்தான் ஆகணும். ஓர் நாளும் அவ உடம்பு சரியில்லேன்னு முனகினது கூட இல்லே!''

அவன் அங்கமெல்லாம் பதறிற்று. ஏதோ ஒரு அசட்டுத் தனத்தில் தன்னைச் சுற்றி இருப்பவர்கள் எல்லாம் சாசுவதம் என்ற நினைப்பில் அசந்து விட்டாற் போல், நேரத்தை நழுவ விட்டாற் போல் வெட்கமேற்பட்டது.

அத்தை முற்றத்துக் குறட்டில் உட்கார்ந்து கொண்டாள். இப்பவும் அவன் குழப்பத்துடன் அவளைப் பார்த்தான். இதைத் தெரிவிக்கவா அத்தை இத்தனை தூரம் பயணித்து வந்திருக்கிறாள்? இதே விஷயத்தைப் பக்குவமாகக் கடிதத்தில் எழுதியிருக்க முடியாதா?

டிகாக்ஷனும் பாலும் இருந்தது நினைவுக்கு வர, அவன் எழுந்து லட்சுமி கொண்டு வைத்திருந்த ஃப்ளாஸ்கை மூட்டிக் காப்பியைக் கலந்து கொண்டு வந்து அத்தையிடம் கொடுத்து அவள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான்.

அவள் குடித்து முடிக்கிறவரை காத்திருந்து லேசாகப் புன்னகைத்தான்.

''இப்பச் சொல்லுங்க, எதுக்கு வந்தேள்னு!''

அத்தை வாஞ்சையுடன் அவன் கையைப் பற்றினாள்.

''நீ ஏதோ ஒரு சஞ்சலத்திலே குழம்பிண்டிருக்கேன்னு எனக்குச் சந்தேகம். இல்லேன்னா இப்படித் திடீர்னு கிளம்பி இங்கு வந்து கல்லூரி மங்களூட்டம் உட்காரமாட்டே. தாராவும் வாயைத் திறந்து ஒண்ணும் சொல்லல்லே. எனக்கு அங்கே இருப்புக் கொள்ளல்லே. மன்னிக்கு வேறே உடம்பு மோசமாயிருக்கு. நீ உன் சொந்தக் குழப்பத்திலே மூழ்கிப் போய் நிலைமையைப் புரிஞ்சுக்காம எங்கே சமயத்துக்கு டில்லிக்கு வராம போயிடுவியோன்னு பயமாயிருந்தது. டில்லியிலேயும் முன்ன மாதிரி உன்னோட பேச முடியறதில்லே. உன்னைப் பார்த்துப் பேசணும்கிற ஆதங்கம் ரொம்ப ஜாஸ்தியாப் போச்சு. நான் இங்கே வந்தாத்தான் நீ இப்போதைக்குத் திரும்புவேன்னு தோணிப் போச்சு. கிளம்பிட்டேன்....''

அவன் நெக்குருகிப் போனான். இத்தனை ஆத்மார்த்தப் பிரியம் வைக்க வேறு யாரால் முடியும்? எத்தனை அக்கறையும் பரிவும் இருக்க வேண்டும்?

''மன்னியாலே அம்மாவைப் பார்த்துண்டு வீட்டையும் பார்த்துக்க முடியுமா? அத்தை?''

''தாராவும் இருக்காளே?''

அவன் சட்டென்று நிமிர்ந்தான்.

''தாராவும் குழந்தையும் இப்ப நம் மாத்திலேதான் இருக்கா. தாராவை விட நல்ல நர்ஸ் அம்மாவுக்குக் கிடைக்க மாட்டாள்.''

அவன் தன் அதிர்ச்சியை மறைத்துக் கொண்டு கேட்டான்.

''ஆஸ்பத்திரியிலே சேர்க்க வேண்டாமா அம்மாவை?''

''அவசியமில்லேங்கறார் டாக்டர். வலிக்கு மட்டும் மருந்து. வேற எதையும் குடுத்துப் பிரயோசனமில்லேன்னுட்டார்.''

அவன் சற்று நேரம் பிரமை பிடித்தாற் போல் உட்கார்ந்திருந்தான்.

''நான் அம்மா கிட்ட நெருங்கிப் பழகினதே இல்லே அத்தை. அம்மாவால என்னைப் புரிஞ்சுக்க முடியாதுங்கற தயக்கம் எனக்கு எப்பவும்.''

திடீரென்று அத்தையின் கண்களிலிருந்து சரம் சரமாய் நீர் வழிந்தது. அவன் இதமாக அவளை அணைத்துக் கொள்கையில் அவள் கண்ணீரிடையே சொன்னாள்.

''இதுக்கு நான்தான் காரணமோங்கற துக்கம் எனக்கு ரொம்ப நாளா இருக்கு கார்த்திக். உன்னை நானே வளர்த்ததிலே அவ கிட்ட நெருங்க சந்தர்ப்பமே கொடுக்காம அவ இடத்தை ஆக்கிரமிச்சுண்டாப்பலே தோணறது. 'எனக்கு உடம்பு சரியில்லேன்னு தெரிஞ்சும் ஊருக்குப் போயிட்டான் பார்த்தியா? என்மேல அவனுக்கு ஒட்டுதலே இல்லே'ன்னாள். தாராவும் குழந்தையும் ஆத்திலே இருக்கிறது அவ



உ.பி.வீக்லி
உ.பி. ஜனதா சங்கம்
கங்கா-காவேரி தனலட்சுமி
உ.பி.ரேபின்

ஞாயிறு — உ. பி. ரேபின்
செவ்வாய் — தனலட்சுமி
புதன் — சங்கம்
வெள்ளி — உ. பி. ஜனதா
சனி — உ. பி. வீக்லி

—உத்தரப் பிரதேச அரசு வாரத்தில் ஐந்து நாட்களுக்குத் தினமும் ஒன்று வீதம் லாட்டரி நடத்தி வருகிறது. இது போதாதென்று ஜூலை மூன்றும் வாரத்திலிருந்து திங்கட் கிழமை தோறும் 'கங்கா — காவேரி' என்ற பெயரில் லாட்டரிக் குலுக்கல் நடத்தப் போகிறதாம்.

அது சரி, வியாழக் கிழமை மட்டும் என்ன பாவம் செய்தது?

—மூர்த்தி கிருஷ்ணன்

ளுக்குச் சந்தோஷம். சம்பிரதாயத்திலே ஊறிப் போனவ. தான் திமர்னு கண்ணை மூடினால் கொள்ளி வைக்க ஒரு பிள்ளையும் நெய்ப் பந்தம் பிடிக்கப் பேரனும் பக்கத்திலே இருக்காங்கங்கற சமாதானம் இருந்தாலும்....''

அதற்கு மேல் தாங்க முடியாதவனாய் உடைந்து போனவன் போல் அவன் முழங்கால்களைக் கட்டி அதற்குள் முகத்தைப் புதைத்து விசித்து விசித்து அழ ஆரம்பித்தான்.

அத்தை கனிவுடன் அவனுடைய முதுகை வருடினாள்.

''யாருமே சாசுவதமில்லே கார்த்திக். வேளை வந்தாச்சுன்னு நாமெல்லாம் கிளம்ப வேண்டியதுதான். இருக்கிற வரைதான் இந்த அஞ்ஞானங்களும் சஞ்சலங்களும்...''

அவன் அடங்குகிற வரை காத்திருந்து அத்தை கொல்லையில் குளித்து விட்டு வந்தாள். ஆகாசம் மெல்ல இருண்டுகொண்டு வந்தது.

அவனுக்கு மண்டை முழுமுழுவென்றது. அத்தையிடம் மனசைத் திறக்காவிட்டால் வெடித்து விடும் போலிருந்தது.

''நாம சாசுவதமா இல்லையா என்கிற கவலை இல்லே எனக்கு. இருக்கிற வரைக்கும் மனசு நிம்மதியா இருக்கணும். அத்தை, எனக்கு அது முக்கியம்.''

அத்தை லேசாகச் சிரித்தாள்.

''நம்ம உசிர் நம்ம கையிலே இல்லே. ஆனா மனசு நம்ம கையிலேதான் இருக்கு கார்த்திக்!''

''எல்லோராலும் ஞானியா இருக்க முடியாது அத்தை. சில விஷயங்களிலே பாதிக்கப்படத்தான் வேணும்.''

''உன்னை இப்பப் பாதிக்கிற விஷயம் என்னன்னு சொல்லு.''

அவனுக்குப் பலவிதமான உணர்ச்சிகள் பீறிட்டுக்கொண்டு கிளம்பின. ஏமாற்றமும் துக்கமும், அவமானமும் குற்ற உணர்வுமாக நாபியிலிருந்து கிளம்பி நெஞ்சை அடைத்தது. அவனுக்குச் சொல்ல வரவில்லை. வார்த்தைகள் கூடவில்லை. இருட்டில் துழாவுகிற மாதிரி தேடினான்.

''என்னுதுன்னு ரொம்பப் பெருமைப்பட்ட விஷயம் என்னுதில்லேன்னு தெரிஞ்சா எனக்கு எப்படி இருக்கும் அத்தை?''

புரியாதவளாய் விசாலம் அவனை ஆழ்ந்து பார்த்தாள்.

''என் குழந்தை எனக்குப் பிறந்தவன் இல்லே!''

''சேச்சே, என்னடா உளர்றே?''

''நிஜம் அத்தை... குழந்தைக்குக் கொஞ்சமாவது என் ஜாடை இருக்கான்னு பார்த்தேளா?''

''சிச்சி, பைத்தியம்! உன் ஜாடை இல்லேன்னு அவாத்து ஜாடை இருக்கக்கூடாதா''

''இருக்கலாம்தான். ஆனா இல்லே. எனக்குத் தெரிஞ்ச ஆங்கிலோ இந்தியனுடைய அச்சு அது!''

''உனக்குப் பைத்தியம்தான் பிடிச்சிருக்கு. தாராவைப் பத்தி இப்படியெல்லாம் பேசாதே!''

''அவளைப் பத்தி நான் எதுவும் அபாண்டமா சொல்லல்லே. என்னமாதிரி ஒரு சினிமாக்கதை இதுன்னு கேளுங்கோ...''

அவன் சிரமப்பட்டுத் தாரா சொன்ன விவரத்தையெல்லாம் சொல்லி முடித்தான்.

''இதையெல்லாம் உங்களாலே நம்ப முடியறதா?''

''இது தாரா சொன்ன விவரம்தானே?'' என்றாள் அத்தை பலவீனக் குரலில்.

''ஆமாம்!''

''அப்ப நம்பறேன்! அவ பொய் சொல்ல மாட்டா! ஒளிவு மறைவு இடையாது அவ கிட்ட.''

''நானுக் கேக்கற வரைக்கும் இந்த விஷயத்தை மறைச்சிருந்தா!''

''அதுக்கான காரணத்தையும் நான் நம்பறேன் கார்த்திக்!''

அவன் வியப்புடன் பார்த்தான்.

''எல்லாம் சரிதான். குழந்தையைப் பார்க்கும்போதெல்லாம் இது என்னுடையது இல்லேங்கிற அதிர்ச்சி எனக்கு எப்படி இருக்கும்னு யோசிச்சுப் பாருங்கோ! சப்பு குருக்களுடைய பேரன் இவன்னு சொல்ல எனக்கு எப்படித் தைரியம் வரும்னு சொல்லுங்கோ!''

அத்தை வெகு நேரம் பதில் சொல்லாமல் வானத்தைக் கண்ணீர் தேங்கிய கண்களுடன் வெறித்துப் பார்த்தாள்.

''சித்த கோயிலுக்குப் போயிட்டு வரேன்'' என்று கிளம்பினாள். அவள் சென்ற சிறிது நேரத்தில், ''அத்தை வந்திருக்காரா என்ன?'' என்றபடி சாப்பாட்டுத் தூக்கை எடுத்துக் கொண்டு லட்சுமி உள்ளே நுழைந்தாள்.

திடீரென்று இடியும் மின்னலுமாக வானம் பொழிய ஆரம்பித்தது. அவன் முற்றத்திலிருந்து அவசரமாக உள்ளேநகர்ந்த போது ''கொல்லைக் கதவு திறந்திருக்கே!'' என்று லட்சுமி சாத்தச் சென்றாள். தாம்பாள் போட்டுக் கொக்கியை மாட்டிவிட்டு வருவதற்குள் மழை அசுர பலத்தோடு கொட்ட ஆரம்பித்தது. (தொடரும்)

---

திருமண அழைப்பிதழ்களில் 'சௌபாக்கியவதி' என்ற சொல்லைச் சுருக்கமாகக் குறிக்க 'Sow' என்ற ஆங்கில வார்த்தையைப் பலரும் உபயோகிக்கிறார்கள். இந்த Sow என்பதற்கு ஆங்கில அகராதியில் என்ன அர்த்தம் கொடுக்கப் பட்டிருக்கிறது தெரியுமா? 'பெண் பன்றி'!

—எஸ். வெங்கடேசன்



# வியர்க்குருவினின்று நிவாரணம் பெற டால்கம் பவுடர் போதாது, நைஸில் வேண்டும்.

# நைஸில் உபயோகியுங்கள் வியர்க்குருவினின்று விரைவில் நிவாரணம் பெறுங்கள்.






HTB-GLL/8608




நைஸில், மருந்துக்கலவையுள்ள பவுடர் ஆகும். வியர்க்குருவின் எந்தவிதத் தொல்லையிலிருந்தும் உடனடியாக நிவாரணம் அளிப்பதற்கென்றே விசேஷமுறையில் தயாரிக்கப்பட்டதாகும். டால்கம் பவுடர்களைப் போலன்றி, பிரச்சினை மோசமாவ தனின்றும், பரவுவதனின்றும் எதிர்த்துக் காக்கிறது இது.

1. அளவுக்கு மீறிய வியர்வையைத் தடுக்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது. 3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இதமளிக்கிறது.

உடல் நலத்தின் உறைவிடம்

**க்ளாக்ஸோ**

அந்தச் சின்னக் குழந்தையின் பட்டுக் கன்னம் 'என்னைக் கிள்ளேன்' என்று கை விரல்களைக் கெஞ்சியது. மையை வரித்து ஒரு ரூபாய் அகலத்துக்குக் குழந்தையின் கன்னம் நிறைய அப்பிவிட்டு வெள்ளையாய்ச் சிரித்து மகிழ்ந்து கொண்டிருந்தாள் அதன் தாய். திருஷ்டிப் பொட்டாம். இப்படிப் பொட்டு வைத்த பிறகுதானே அந்தக் குழந்தைக்கு அழகு கூடி திருஷ்டி பட்டு விடும்போல் தோன்றுகிறது?

'கசப்பும் ஒரு சுவை, கறுப்பும் ஒரு நிறம்' என்பார்கள். அனுபவிக்கத்தெரிந்தவர்களுக்கு எல்லாமே அழகுதான்.

பக்கத்தில் அமர்ந்து, பஸ்ஸின் குலுக்கலோடு குலுங்கிச் சிரித்து மகிழ்ந்து கொண்டிருந்த அந்தக் கறுப்புப் பெண்ணும், அவளுடைய 'திருஷ்டி'க் குழந்தையும் பார்வதியின் மனசில் கொஞ்சம் வேதனையை விதைத்தது நிஜம்தான்.

கொஞ்சம் வசதியாக உட்கார வேண்டும் என்பதற்காக அவள் நெருக்கியபோது, பார்வதிக்குக் கோபம் கூட வந்தது.

கோபமாய் எதையாவது சொல்லப்போனால் கூட அது பொறுமையின் வடிகாலாய் இருக்குமோ என்கிற எண்ணம் வந்தபோது அவள் அடக்கிக் கொண்டாள்.



# கறுப்பாய் ஒரு வைரம்

சுப்ர. பாலன்

இன்னும் எட்டு மணி நேரப் பயணம், இவளுடன்தான், இந்த நெரிசலில்தான்.

குழந்தை அமைதியாய்த் தூங்கத் தொடங்கியிருந்தது. 'இந்தச் சத்தத்திலும் இந்தக் குழந்தை எப்படி உறங்குகிறது பாரேன்' என்று அதிசயமாகப் பார்த்தாள் பார்வதி. குழந்தையின் மடங்கியிருந்த காலைப் பிரித்து மடியில் நீட்டிக் கொண்டாள். கறுப்புப் பெண் இப்போது பயம் நீங்கி நன்றியுடன் பார்த்தாள்.

ஒரு குலுக்கலில் பஸ் சட்டென்று நின்றது. குறுக்கே வந்து சக்கரத்தில் அகப்படாமல் தப்பிவிட்ட யாரையோ திட்டித் தீர்த்துவிட்டு மறுபடியும் பஸ்ஸைக் கிளப்பி விரைவுபடுத்தினார் டிரைவர்.

''மணி என்னுங்க ஆவுது?'' — அவள் கேட்டாள்.

''பத்தாச்கம்மா!'' என்று சொன்னாலும் மணி கேட்டு இவளுக்கு என்ன ஆகவேண்டும் என்று வார்த்தையில் அலட்சியம் மிதந்தது.

''இதோட அப்பாரு பஸ்ஸுக்கு வாரம்னு சொன்னாக. திண்டிவனம் வந்ததும் சொல்லுங்கம்மா. இருட்டுல தெரியாது... வுட்டுடப் போறேன்...''

திண்டிவனம் போக மணி இரண்டாகுமோ மூணாகுமோ! பார்வதிக்கே யாராவது சொன்னால்தான் நல்லது என்கிற நிலை. இருந்தாலும் ''சரிம்மா'' என்று சொல்லி வைத்தாள்.

அந்தப் பெண் அடுத்த சில விநாடிகளில் தூங்கிவிழ ஆரம்பித்தாள். பார்வதி சங்கடத்தில் நெளிய வேண்டியதாயிற்று. தனக்கு நிச்சயமாய்த் தூக்கம் வரப்போவதில்லை என்றாலும், அந்தப் பெண் தூக்கத்




தில் எங்கே குழந்தையைக் கைநழுவ விட்டு விடுவானோ என்று பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பைத் தானே சேர்த்துக் கொண்டாள்.

பஸ்ஸில் ஏறி அமர்ந்து கொண்ட நிமிஷத்திலிருந்து, ஏன் வீட்டை விட்டுப் புறப்பட்ட விநாடியிலிருந்து கூட பார்வதியின் மனசில் சங்கட விதை புரண்டு நெளிந்து கொண்டேதான் இருக்கிறது.

மாமியாராய் லட்சணமாய்ப் பேரன் பேத்தியைக் கொஞ்சிக்கொண்டு, சுலோகப் புத்தகங்களில் மூழ்கியிருக்க வேண்டிய வயசில் வீம்பு வரலாமோ? வந்துவிட்டது. 'நீயா, நானா' என்று சவால் விடுகிற அளவு தரம் தாழ்ந்து வாழ்கிற நிலை இல்லை..... ஆனாலும்—

'இனிமே இந்த வீட்டிலே உங்களுக்கு இடைஞ்சலா இருக்கவேமாட்டேண்டியம்மா' என்று வாய் விட்டுச் சொல்லாமல் தான் வெளியே வந்தாள் பார்வதி.

இந்தப் பிள்ளை வீடு கசந்து முரண்டு பண்ணினால், அந்தப் பெண் வீடு... அதுவும் இடறினால் பழையபடி பிள்ளை வீடு என்று ஒரு வளையம் பார்வதியின் பாதை. இரண்டுமே கசந்து போனால் எங்கே போவது? இப்போது ஏறக் குறைய அந்த நிலைதான்.

மூணு நாட்கள் முன்னால்தான் பெண்ணிடம் கோபித்துக் கொண்டு பிள்ளையிடம் வந்தாள். உரிமையுடன் ராஜ்ய பாரம் பண்ண வேண்டிய இடத்திலும், படித்த - அதுவும் உத்தியோகம் பார்க்கிற — மருமகளிடம் செல்லுபடியாகுமா?

''என்ன, உங்கம்மா ஜானு கிட்டக் கோவிச்சுண்டு வந்துட்டாப்பல இருக்கே, கவனிச்சேளா?''

'உம்' கொட்டிக் கொட்டியே அவனுடைய காலம் ஓடிவிட்டது. நியாயமாகத் தாலியை இவன் கட்டிக் கொண்டிருக்கலாம். பூம்பூம் மாடாய்த் தலையை ஆட்டுகிற பிள்ளையைப் பெற்றேனே என்று பார்வதி அலுத்துக் கொள்வாள்.

இந்த முறை படியேறுகிறபோதே, மருமகள் பிள்ளையிடம் பேசியது அவள் காதில் விழுந்திருக்க வேண்டாம். அதையும் கவனித்ததாய்க் காட்டிக் கொண்டிருக்க வேண்டாம்.

''ஒருத்தர் கிட்டேயும் கோபமில்லேடி பொண்ணே.... என்னமோ வரணும்னு தோணித்து, வந்தேன்... நாளைக்கே போகணும்னு தோணினாப் போயிடறேன். வயசானாலே சோத்துக்குக் கேடு, பூமிக்குப் பாரம்தான். எல்லாருக்கும் வயசாகுமோல்லியோ?''

வழக்கமான மாமியார்த்தனம் வார்த்தையில் மின்னியது. லட்சியம் பண்ணுகிறவள் இல்லை மருமகள் ராதா. சிரித்துக் கொண்டே உள்ளே போனாள் அவள். ஆனால் இந்தக் கிண்டலிலும் கேலியிலும் பிள்ளையும் சேர்ந்து கொண்டதைத்தான் பார்வதியால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. திடும் என்று புறப்பட்டாயிற்று... சற்று நேரம் கண்ணை

மூடி, பஸ் குலுக்கலில் ஆடிக் கொண்டே வந்தால் பொழுது விடிந்து விடும்.

பக்கத்துக் கறுப்புப் பெண்ணின் நினைவு சடக்கென்று வந்தது. கைக்கடிகாரத்தைத் திருப்பி மணி பார்த்தாள். அந்த இருட்டில் சிரமப்பட்டுத்தான் நேரம் அறிய முடிந்தது.

இரவு மணி ஒன்றரை ஆகியிருந்தது. இன்னும் அரை மணியில் திண்டிவனம் வந்து விடுமே, அவள் எழுப்பச் சொன்னாளே என்று நினைவு வந்தது.

மெல்லத் தட்டினாள். அந்தப் பெண் என்ன கனவில் திணறிக் கொண்டிருந்தாளோ! திடுக்கிட்டுக் கண் விழித்த அவசரத்தில் கறுப்பு வைரத்தை நழுவ விடப் பார்த்தாள். குழந்தை 'வீல்' என்று கத்தி பஸ்ஸில் பலரையும் உசுப்பி விட்டது.

''இந்தாம்மா.... திண்டிவனம் வரப் போகிறது. மூட்டையை யெல்லாம் சரி பார்த்து வச்சுக்கோ... ஜாஸ்தி நேரம் நிக்க மாட்டான்.''

அவள் பரபரத்தாள். மூட்டை முடிச்சுக்களை எடுத்துப் பாதையில் வைத்துக் கொண்டாள். 'வீல்' என்று கத்திய குழந்தையை நெஞ்சோடு அணைத்துக் கொண்டு 'ரோ... ரோ....ரோ...' சொல்லிச் சமாதானப்படுத்தினாள்.

பஸ் நின்றதும் சொல்லாமல் கொள்ளாமல் விடுவிடுவென்று இறங்கினாள். டீக்கடை, இட்டிலிக் கடையின் மங்கலான வெளிச்சத்தில் இடுப்பில் குழந்தையுடன் அவள் முன்னே செல்ல, அவளுடைய அவன் மூட்டை முடிச்சுக்களுடன் நடந்த அழகை அர்த்த நேரத்திலும் பார்வதியால் ரசிக்க முடிந்தது.

'ஊருக்கு ஊர், வீட்டுக்கு வீடு இதுவே தானோ' என்று மின்னல் பொறி வெட்டியது. யாரோ ஒரு கறுப்பு இளவரசியும் அவளுடைய ராஜகுமாரனும் போகிற அழகை ரசித்துப் பார்த்து மகிழ்கிற மனசால் என் சொந்தப் பெண்ணையோ, பிள்ளையையோ, மருமகளையோ இப்படி யெல்லாம் ரசிக்க முடிவதில்லை? இது என்ன மனசு?

மகனுக்கு அடங்கிய பெட்டிப் பாம்பாய் அவனுடைய மனைவி இருக்க வேண்டும் என்று பெண்ணாகிய நானே ஏன் நினைக்க வேண்டும்!

பார்வதி கண்களை மூடிக் கொண்டாள். மனசில் ஆயிரம் காட்சிகள் படம் படமாய்ச் சுருண்டு ஓடின.

''சித்த வாயை மூடிண்டு சும்மா இருந்து தொலைக்க மாட்டியா? என்னத்தையாவும் சொல்லி... அம்மா மனசுதான் தெரியுமே... ஏன் அவ மனசு சங்கடப் படற மாதிரி பண்ணி விரட்டி விட்டுட்டே....'' என்று அவன் கடிந்து கொள்வதும்—

''ஏன்... நீங்கதான் அம்மாவைப் போகாதேன்னு சொல்லி நிறுத்தறது! யார் வேண்டாம்னு சொன்னா...? போறப் போய்க்கட்டும் போன்னு விட்டது மட்டும் உங்க தப்பில்லையாக்கும்?'' என்று அவள் பதில் வெட்டுவதும்—

பார்வதிக்கு மனசில் இனித்தன. இனிமேல் நடக்கப் போவதை நினைத்துப் பார்த்தாள்.

காலையில் ஊர் போனதும், முன்னறிவிப்பில்லாமல் பெண்ணின் வீட்டில் போய்க் கதவைத் தட்டி அவளை வியப்பில் ஆழ்த்துவதும்—

''என்னம்மா? ஒரு கடிதாசு கூடப் போடலியே... அதுக்குள்ள பேரனைப் பார்க்கணும்னு தோணித்தோ... என்னதான் என்னைக் கோவிச்சுண்டு போனாலும் உன் பேரன் உன்னை இழுப்பான்னு தெரியுமே எனக்கு...''

புன்னகை விரிய மகள் சொல்லப் போவதும்—

மனசுக்கு மிகவும் இதமாக இருந்தன.

கைப் பையைத் திறந்து கண்ணாடியை எடுத்துப் பார்த்தாள். மங்கலான பஸ் வெளிச்சத்தில் தன்னுடைய உருவம் சரிவரப் புலப்படா விட்டாலும், கன்னத்தில் மைவழியக் கிடந்த கறுப்புக் குழந்தை, பெண் வயிற்றுப் பேரக் குழந்தை—

எல்லோரையும் விடத் தானே இன்னும் குழந்தையாய் வீம்பு பண்ணிக் கொண்டு இங்கும் அங்குமாய் அலைவதாய்த் தோன்றியது அவளுக்கு. மெள்ளச் சிரித்துக்கொண்டாள்!



# N.S.K.

பைனான்சியர்ஸ்

(ஹையர் பர்ச்சேஸ் ப்ரமோட்டர்ஸ்)



## கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் ஃபிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

# 21%

அன்பளிப்பு வெள்ளிக் குத்துவிளக்கு
ஒவ்வொரு ரூ.5000/-
(குறைந்தது இரண்டு வருடங்கள்)
டெபாசிட்டுக்கும்

மாதாந்திர வட்டி விகிதங்கள்

| 6 மாதங்கள் | 1 வருடம் | 2 வருடங்கள் | 3 வருடங்கள் | 5 வருடங்கள் |
|---|---|---|---|---|
| 15% | 16% | 17% | 18% | 21% |

(Minimum deposit acceptable Rs. 1000/- multiples)

உங்களுடைய முதலீடு 48 மாதங்களில் எங்கள் "கோல்டன் கேஷ் சர்ட்டிபிகேட் டிபாசிட் திட்டத்தின்" மூலம் இருமடங்காகிறது.

# N.S.K.

சிட் ஃபண்ட்ஸ் (பி) லிமிடெட்



| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ரூ. | 1,000 | × | மாதங்கள் | 50 | ரூ. | 50,000 |
| ரூ. | 1,000 | × | மாதங்கள் | 25 | ரூ. | 25,000 |
| ரூ. | 500 | × | மாதங்கள் | 50 | ரூ. | 25,000 |
| ரூ. | 500 | × | மாதங்கள் | 20 | ரூ. | 10,000 |
| ரூ. | 250 | × | மாதங்கள் | 40 | ரூ. | 10,000 |
| ரூ. | 250 | × | மாதங்கள் | 20 | ரூ. | 5,000 |
| ரூ. | 125 | × | மாதங்கள் | 40 | ரூ. | 5,000 |

ஏல்முறை : பாதுகாப்புத் தொகையுடன் பகிரங்க ஏலம்.

**சீட்டுகள் சேர, முதலீடு செய்ய தொடர்பு கொள்க :**

**பதிவு & நிர்வாக அலுவலகம்:**

எண். 38B, பர்கிட் ரோடு (முதல் மாடியில்),
(தி. நகர் பேருந்து நிலையம் எதிர்புறம்), தி. நகர், சென்னை 600 017.

ma 328

**Build your fortune with N.S.K.**

# கோத்ரெஜ் ஸ்டோர்வெல் — ஆயுட்கால அன்பளிப்பு !



கோத்ரெஜ் ஸ்டோர்வெல், எந்த சந்தர்ப்பத்திற்கும் ஏற்ற அருமையான அன்பளிப்பு. ஆயுட்காலம் முழுவதும் நினைவில் நிற்கும் அன்பு பரிசு. வழக்கமான மற்ற ஸ்டீல் அல்லது மர அலமாரிகளோடு ஒப்பிடும்போது, இந்தப் பயன்மிக்க,கவர்ச்சியான, ஸ்டீல் அலமாரி தனக்கே உரிய, நீடித்த உழைப்பாற்றல் மற்றும் கூடுதல் பாதுகாப்பு போன்ற, நலயங்களைக் கொண்டது.

கோத்ரெஜிடம் மட்டுமே உள்ள வண்ணப் பூச்சு முறை காரணமாக, கீறல் விழாத மேம்பட்ட மெருகு, இதன் அழகிற்கு மேலும் பொலிவூட்டுகிறது.

தவிரவும் முழுநீள 137 செ.மீ. வெளிநாட்டு 'ப்ளேட்' கண்ணாடி, தகர்க்க முடியாத பூட்டுகள், மறைவான கீல்கள், இறுக மூடிக்கொள்ளும் மும்முனைப் பூட்டு மற்றும் அட்ஜஸ்ட் செய்யக்கூடிய ஷெல்ப்புகள்.

இத்தனைச் சிறப்புகளாலும் கோத்ரெஜ் ஸ்டோர்வெல் மறக்க முடியாத, பல தலைமுறைகளுக்கு உழைக்கும் அன்பளிப்பாக அமைகிறது.

கோத்ரெஜ் Godrej®

மேம்பட்ட தொழில்—
நுட்பம் மற்றும் மதிப்பு.

ULKA-GS-2-82 TAM

# கல்

**அன்னம்**

என் கணவர் மறைந்து போய் இன்று பதினாறாவது தினம்.

போன மாதம்தான் நாங்கள் பெரிதாகத் திட்டம் போட்டிருந்தோம்.—அடுத்த மாத முதலில் நீண்ட விடுமுறை போட்டுவிட்டு இந்தியா முழுவதும் சுற்றிப் பார்த்து வர வேண்டும் என்று. இப்போது அவரே திரும்பாத ஊருக்குத் தனியாகப் புறப்பட்டுப் போய் விட்டார்.

வீடு முழுவதும் மனிதர்கள். இரு தரப்புச் சொந்தக்காரர்கள். கல்யாணம் கூட இத்தனை கலகலப்பாக இருக்காது. இத்தனை நாட்கள் நீடித்திருக்காது.

என் விதி இன்று நிச்சயமாகப் போகிறது. முப்பத்திரண்டு வயதான இந்த விதவை இனி யார் ஆதரவில்?... நான் தனி மரம். எங்கள் வாழ்க்கைச் செடி ஓர் அரும்புகூட விடவில்லை.

என் தங்கை வந்திருக்கிறாள். பெரிய குடும்பம். தனியாகத் திண்டாடுகிறாள். கூப்பிட்டால் போகலாம். அவளுக்கு நான் உதவியாக இருப்பேன்.

என் தம்பி – ஒரே தம்பி. அம்மா போன பிறகு என்னைத்தான் அவன் தாயாக எண்ணி வருகிறான். அவன் மனைவி என்னிடம் காட்டும் பரிவு எனக்கு ஒரு மகள் இருந்தால் கூடக் கிடைக்குமா என்பது சந்தேகமே.

அவருடைய தம்பி புதிதாகத் திருமணம் ஆனவர். கணவன் – மனைவி இருவருமே வேலைக்குப் போகிறார்கள். கைக் குழந்தை வேறு. நான் காய்க்காத மரம் என்று தெரிந்திருந்தும் பெற்ற பிள்ளையை என் மடியிலே போட்டு விட்டுப் போகிறாள். அவள் அழைப்பாளோ?

அவரது அண்ணன் கிராமத்திலிருந்து வந்திருக்கிறார். பூர்வீக வீடு, தோட்டம் துரவு எல்லாம் உள்ளன. நான் போனால் அவற்றைக் கவனித்துக் கொள்ள முடியும். அவருடன் தான் போகப் போகிறேனா?

இந்த வீடு எங்கள் வீடு. . பார்த்துப் பார்த்துக் கட்டியது. நிச்சயம் ஒரு லட்சத்துக்கு விலை போகும். எனக்கு இத்தனை பெரிய வீடு வேண்டாம். வாடகைக்கு விட்டு அதில் வரும் பணத்தைக் கொடுத்தால் யாரும் எனக்குச் சோறு போட மறுக்க முடியாது. ஆனால்—

நான் குடித்தனம் தொடங்கிய நாள் முதல் வீட்டில் சமையல் வேலை பார்த்த சம்பூர்ணம், தோட்டக்கார ராமன் மற்றும் வீடு கூட்டும் அஞ்சலை அத்தனை பேரையும் நான் விட்டு விட்டுப் போக வேண்டும். அவர்கள் என்ன என் உறவினர்களா? சம்பளத்திற்கு வேலை செய்பவர்கள்தானே? இந்த மடம் இல்லாவிட்டால் வேறு மடம். எங்கே அதிகக் கூலி கிடைக்கிறதோ அங்கே ஒட்டிக் கொள்வார்கள்.

இன்று மாலைதான் வக்கீல் வருகிறார். என் கணவரின் உயிலைப் படிக்கப் போகிறார்.

• • •

சொன்னபடி பிற்பகல் நான்கு மணிக்கு வக்கீல் வந்தார். எல்லோரும் அவர் முகத்தையே பார்த்துக் கொண்டிருக்க, உயிலைப் படிக்க ஆரம்பித்தார்.



''ரங்கமன்னூர் குமாரனும், வேதாசலம் பேரனுமான ஆர். கோவிந்தராஜன் என்ற நான் என் சுய உணர்வுடன் யாதொரு நிர்ப்பந்தமுமின்றி எழுதி வைத்த உயில்...'' எனத் தொடங்கியது.

படிக்கப் படிக்க எனக்கே பயமாகப் போயிற்று. இத்தனை பேரிடம் கடன் வாங்கியிருக்கிறாரா?... சொத்தின் மதிப்பு மூன்று லட்சம் என்றால் கடன் ஐந்துலட்சம் இருக்கும் போல் இருக்கிறதே!

''எனக்குக் கடன் கொடுத்தவர்களை நான் ஏமாற்ற விரும்பவில்லை. என்னுடைய வக்கீல் அவர்களைக் கலந்து ஆலோசித்து எப்படியாவது அந்தக் கடனைக் கூடிய சீக்கிரம் என் மனைவி கோதை மூலம் அடைக்க வேண்டும். என்னுடைய ஈமச் சடங்குகளுக்காகத் தனியாகப் பன்னிரண்டாயிரம் பாங்கியில் போட்டிருக்கிறேன். அதை உபயோகித்துக் கொள்ள வேண்டியது. என்னுடைய மனைவி போட்டிருக்கும் நகை மற்றும் இன்ஷூரன்ஸ் தொகை அவள் ஜீவனத்திற்காக அவளே அனுபவித்துக் கொள்ள வேண்டியது....''

வக்கீல் முடித்தார். ''கடன் விஷயம் பற்றியும் அவர் என்னிடம் விவரமாகச் சொல்லியிருக்கிறார்... இப்போது சொல்ல நேரமாகும்.... அப்புறம்....''

''அப்புறமே சொல்லலாம்!'' என்றார்கள் உறவினர்கள் எல்லோரும் ஒரே குரலில்.

● ● ●

வக்கீல் போன பிறகு நான் என்னையே மறந்து உட்கார்ந்திருந்தேன். என் மடியில் கிடந்த குழந்தையைச் 'சட்'டென்று தூக்கினாள் அவர் தம்பியின் மனைவி.

அவர்கள் ஊருக்குப் புறப்பட்டு விட்டனர். ''அண்ணன் என்கூட வருகிறார்...'' என்றார் சின்னவர் மரியாதைக்காக. ''கடிதம் போட்டுக் கொண்டிரு!'' என உபதேசித்துவிட்டு வாயிற் படியைத் தாண்டினார் பெரியவர்.

என் தம்பி தயங்கித் தயங்கி வந்தான். ''என்ன செய்வது அக்கா! நடக்கக் கூடாதது நடந்து விட்டது. இனிமேல் நாம்தான் மனத்தைத் தேற்றிக் கொள்ள வேண்டும். இதற்கு மேல் எனக்கு லீவு கிடைக்காது. ஏதாவது வேண்டுமானால் கடிதம் எழுது. கிட்டவா இருக்கிறது. அடிக்கடி புறப்பட்டு வர?''

நான் இருந்தது கோவையில். அவன் இருந்தது சேலத்தில்; அவ்வளவுதான்.

என் தங்கை மட்டும்தான் பாக்கி. அவள் மட்டும் என்னை அழைக்கப் போகிறாளா?

''உன்னைத் தனியாக எப்படியக்கா விட்டு விட்டுப் போகிறது? எங்கள் வீட்டில் தனியாகப் படுத்துக்க ரூம்கூட இல்லை... உனக்கு ரொம்பச் சிரமமாக இருக்குமேன்னுதான் பேசாமப் புறப்பட்டுப் போறேன்...''

நல்ல நடிகை. பிழைக்கத் தெரிந்தவள்!

● ● ●

எல்லோரும் போய் விட்டார்கள்.

சம்பூர்ணம் — ராமன் — அஞ்சலை மட்டும் தயங்கித் தயங்கிநின்றுகொண்டிருக்கிறார்கள்.

''நீங்கள் மட்டும் ஏன் இருக்கிறீர்கள்?... சம்பளப் பாக்கிக்காகத்தானே? நாளைக்குக் கொடுக்கச் சொல்கிறேன்...!'' என்று எரிந்து விழுந்தேன்.

''சம்பளத்திற்காகவா சமைத்தேன் கோதை?.. உன்னையும் உன் வீட்டுக்காரரையும் நான் என் மகனும் மருமகளுமாக நினைத்தேன்.... நீ இப்போது எதற்கும் கவலைப் படாதே.... என் உயிர் இருக்கும் வரை நீ ஒரு நாள் கூட வாட நான் விட மாட்டேன்!'' என்றாள் சம்பூர்ணம்.



''நர்ஸ்! நோயாளிக்கு வைச்சிருந்த குளுகோஸ் வாட்டர் என்ன ஆச்சு?''

''நோயாளிக்குத் துணைக்கு வந்தவர் தண்ணி தாகம்னு எல்லாத்தையும் எடுத்துக் குடிச்சுட்டார்!''

• ஏ. ராமசாமி




நமது அண்டை நாடான இலங்கை வானொலியின் தமிழ்ச் சேவை-2ல் மட்டும் தினமும் 196லிருந்து 212 தமிழ்த் திரைப் பாடல்கள் ஒலி பரப்பாகின்றன. ஒரு நாளில் ஒரு படத்திலிருந்து ஒரு பாடல்தான் ஒலிபரப்பாகிறது. இதைத் தவிர தென்னிந்திய சேவை, ஆசிய சேவை நிகழ்ச்சிகளிலும் தமிழ்ப் பாடல்கள் நிறைய ஒலிபரப்பப் படுகின்றன. ஆனால் தமிழ் நாட்டிலுள்ள சென்னை, திருச்சிராப்பள்ளி வர்த்தக ஒலிபரப்பு நிகழ்ச்சிகளில் தினமும் 50 திரைப்படப் பாடல்களுக்கு மேல் ஒலி பரப்புவதே யில்லை.!

—எம். ராஜேந்திரன்

''எங்க வீட்டுக்கு வாங்க அம்மா!.. நீங்க வர்றதுக்கு நாங்க கொடுத்து வைத்திருக்கணும்!'' என்றார்கள் ராமனும் அஞ்சலையும்.

கணவன் — மனைவி இருவரிடையே என்னை அழைப்பதில்தான் எத்தனை ஒற்றுமை!

போகிறேனா இல்லையோ! அவர்கள் அழைப்பு உதட்டளவில் அல்ல. உள்ளத்தின் அடியிலிருந்து தானாகப் பொங்கி எழும் ஊற்றைப் போல வெளியிடப் பட்டது என்பது நிதரிசனமாகத் தெரிந்தது.

நான் தனியில்லை... அநாதையில்லை...

மனத்தில் பெருத்த நிம்மதியுடன் உறங்கப் போனேன்.

• • •

மூன்றும் நாள் மறுபடியும் வக்கீல்வந்தார்.

''எல்லாரும் போய் விட்டார்களாமே!... ராமன் சொன்னான்!'' என்றார்.

வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவது போல இது என்ன கேள்வி?

''உங்கள் கணவர் எதிர்பார்த்ததுதான். அதனால்தான் அவர் இந்தக் கவரை உங்களிடம் தனியாக இரண்டு நாட்கள் கழித்துத் தரச் சொன்னார்.''

அதை வாங்கிப் பிரித்த நான் பிரமித்துப் போனேன். அந்தக் கவரில் என் பெயரில் வாங்கப் பட்டிருந்த பெரிய பெரிய நிறுவனங்களின் பங்குப் பத்திரங்கள், அவைகளில் வரும் டிவிடெண்ட் டணத்திலிருந்து கடன்களை அடைக்க வழி சொல்லப்பட்டு இருந்தது.

''இனியும் நீங்கள் தொடர்ந்து இந்த வீட்டிலேயே வழக்கம் போல இருக்கலாம். வரும் பணம் போதும்....''

''இல்லை ஸார்!... இந்த வீட்டை வாடகைக்கு விட ஏற்பாடு செய்யுங்கள். நானும் சம்பூர்ணமும் அஞ்சலை வீட்டுக்குப் பக்கத்தில் ஒரு சிறிய இடம் பார்த்துப் போகிறோம். வேண்டப்பட்டவர்கள் வேறு யார் எனக்கு இருக்கிறார்கள்?'' என்றேன் குரல் தழுதழுக்க.

கல் விழுந்ததும் பறந்து போகும் காக்கைக் கூட்டம் போல் — கடன் சுமை என்றதும் பயணமான என் சொந்த பந்தங்களை நினைத்து அதே சமயம் வெட்கிப் போனேன்!



# விஞ்ஞானம் பற்றி அணு அளவாவது தெரியுமா?

அண்மையில் கல்பாக்கம் அணு மின் நிலையம் இயங்கத் தொடங்கியிருக்கும் மகிழ்ச்சியான செய்தி, தமிழக மக்களின் காதில் சுத்தமான 'அக்மார்க்' தேனைப் பாய்ச்சியிருக்கிறது! வடிவமைப்பு, கட்டுமானப் பணி, தேவையான இயந்திரங்கள் தயாரிப்பு ஆகிய அனைத்துக்குமே நம் நாட்டு விஞ்ஞானிகள் தான் பொறுப்பேற்றிருக்கின்றனர். இந்தச் சந்தர்ப்பத்தில் நமது அடிப்படை விஞ்ஞான அறிவை நாமே சோதித்துக்கொள்ள இதோ ஒரு சுலபமான 'க்விஸ்'. ஒவ்வொரு சரியான விடைக்கும் 1 மார்க் போட்டுக்கொள்ளுங்கள்!

1. அணுவைப் பற்றி ஆராய்ந்து கூறிய பண்டைக் காலக் கிரேக்க விஞ்ஞானி:
(அ) ஆர்க்கிமெடிஸ் (ஆ) பிதகோரஸ் (இ) யுரேகா (ஈ) டெமாக்ரிடஸ்

2. அணுவில் அடங்கியிருப்பதாகக் கூறப்படுவது:
(அ) புரோட்டான், நியூட்ரான், எலக்ட்ரான், (ஆ) புரோட்டான், எலெக்ட்ரான் (இ) பொஸிட்ரான், நியூட்ரான் எலெக்ட்ரான் (ஈ) புரோட்டான், ஆண்டிபுரோட்டான்.

3. சந்திர கிரகணம் எப்போது ஏற்படுமெனில்:
(அ) சூரியனுக்கும் சந்திரனுக்கும் இடையே பூமி வரும்போது (ஆ) சூரியனுக்கும் பூமிக்கும் இடையே சந்திரன் வரும்போது (இ) சந்திரனுக்கும் பூமிக்கும் இடையே சூரியன் வரும்போது (ஈ) பௌர்ணமிக்கு மறுநாள்.

4. பூமியின் வயது சுமாராக:
(அ) 36 மில்லியன் ஆண்டுகள் (ஆ) 22 மில்லியன் ஆண்டுகள் (இ) 13,000 மில்லியன் ஆண்டுகள் (ஈ) 8,000 மில்லியன் ஆண்டுகள்.

5. ஒரு முறை பூமியைச் சுற்றி வருவதற்கு சந்திரன் எடுத்துக் கொள்ளும் காலம் சுமாராக:
(அ) ஒரு நாள் (ஆ) எட்டு மணி நேரம் (இ) ஒரு மாதம் (ஈ) ஒரு வருடம்.

6. அணுகுண்டுக்கு முன்னோடியான சங்கிலித் தொடர் விளைவுகளை முதன் முதலில் வெற்றிகரமாகச் செய்து காட்



   

டிய விஞ்ஞானிகள் குழுவுக்குத் தலைமை தாங்கியவர்:
(அ) ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் (ஆ) எட்வர்ட் டெல்லர் (இ) நீல்ஸ் போர் (ஈ) என்ரிகோ ஃபெர்மி.

7. தொலை நோக்கிகளின் உதவியின்றிச் சாதாரணமாக நாம் காண முடியாத கிரகம்:
(அ) சுக்கிரன் (ஆ) புதன் (இ) நெப்ட்யூன் (ஈ) செவ்வாய்.

8. 'தி பிக் பேங்' (The Big Bang) என்ற சொற்றொடர் எதைக் குறிக்க விஞ்ஞானிகளால் பயன்படுத்தப்படுகிறது?
(அ) ஹைட்ரஜன் குண்டு வெடிக்கப்பட்டதை (ஆ) சூப்பர்ஸானிக் விமானத்தை (இ) பிரபஞ்சம்தோன்றியதை (ஈ) ஹிரோஷிமாவில் அணுகுண்டு வீசப்பட்டதை.

9. 'வெப்பக் கிரகம்' என்று அழைக்கப்படுவது:
(அ) சுக்கிரன் கிரகம் (ஆ) சனி கிரகம் (இ) கொலம்பியா விண்வெளிக் கலம் (ஈ) செவ்வாய்க் கிரகம்.

10. மின்சக்தியைப் பற்றிய எந்த வித ஆராய்ச்சியிலும் ஈடுபடாத விஞ்ஞானி
(அ) பெஞ்சமின் ஃபிராங்க்ளின் (ஆ) மைக்கேல் ஃபாரடே (இ) ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் (ஈ) ஐஸக் நியூட்டன்.

11. 'ரேடியோ கார்பன் டேட்டிங்' முறை பயன்படுத்தப்படுவது:
(அ) ஒருவர் புற்றுநோயால் எத்தனை காலமாகப் பாதிக்கப் பட்டிருக்கிறார் என்பதைக் கண்டு பிடிக்க (ஆ) பழங்கால 'வால்வு' ரேடியோக்கள் எந்த ஆண்டு தயாரிக்கப்பட்டன என்பதைக் கண்டறிய (இ) கார்பன் பிரதிகள் மங்குவதன் மூலம் தஸ்தாவேஜுகளின் உண்மை வயதைக் கண்டறிய (ஈ) தொல்பொருள் ஆராய்ச்சியில் பழங்காலப் பொருட்களின் 'வயது' என்னவென்று கண்டு பிடிப்பதற்காக.

12. ஒளியானது:
(அ) வெற்றிடத்திலும் ஊடுருவிப் பாயும் தன்மை கொண்டது (ஆ) எப்போதும் நேர்க்கோட்டிலேயே பாய்வது (இ) திடப் பொருள்களின் ஊடே பாயாது (ஈ) ஒலியை விடத் தாமதமாகப் பாய்வது.

13. ஒலியின் வேகம் சுமாராக:
(அ) நிமிடத்துக்கு 3,000 மீட்டர் (ஆ) செகண்டுக்கு 300 மீட்டர் (இ) செகண்டுக்கு 3 லட்சம் கிலோ மீட்டர் (ஈ) செகண்டுக்கு 3 மீட்டர்.

14. 'ஹோலோகிராம்' என்பது:
(அ) அதி வேக செய்தித் தொடர்புக்கான எலெக்ட்ரானிக் கருவி (ஆ) அணுக்களைச் சிதற வைக்கும் சாதனம் (இ) முப்பரிமாண உருவங்களை உருவாக்கப் பயன்படக் கூடிய ஸ்லைட் (ஈ) எதிர் காலத்தில் பிரபலம் அடையக்கூடிய போக்கு வரத்து சாதனம்.

15. LED என்பதன் விரிவாக்கம்:
(அ) Laser Electronic Device (ஆ) Light Emitting Diode (இ) Low Electricity Destruction (ஈ) Long Ended Destroyer

16. ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் தமது பிரசித்தி பெற்ற $E=NC^2$ என்ற தத்துவத்தை அறிவித்த ஆண்டு:
(அ) 1898 (ஆ) 1921) (இ) 1905 (ஈ) 1942.

17. வியாழன் கிரகத்தின் சந்திரன்களை முதன் முதலில் தொலை நோக்கியின் உதவியால் கண்டறிந்தவர்:
(அ) ஆர்க்கிமெடிஸ் (ஆ) கலிலியோ (இ) கோப்பர்னிக்கஸ் (ஈ) கெப்ளர்.

18. அயல் நாட்டிலிருந்து தருவிக்கப்பட்ட உறுப்புக்களைக் கொண்டு தயாரிக்கப்பட்ட நம் நாட்டு பாக்கெட் கால்குலேட்டர்கள் விற்பனைக்கு வெளியிடப்பட்ட ஆண்டு:
(அ) 1958 (ஆ) 1965 (இ) 1979 (ஈ) 1972.

விடைகள்:

1. ஈ 2. அ 3. அ 4. இ 5. இ 6 ஈ 7. இ 8. இ 9. ஈ 10. ஈ 11. ஈ 12. அ 13. ஆ 14. இ 15. ஆ 16. இ 17. ஆ 18 ஈ.

18–15 மார்க்: எதிர்காலத்தில் நீங்கள் நோபல் பரிசுகூடப் பெறலாம்... யார் கண்டது?

14–12 மார்க்: உங்களதுவிஞ்ஞான அறிவை இன்னும் கொஞ்சம் தீட்டிக் கொண்டால், எதிர்காலம் பிரகாசமாக அமையும்.

11– 9 மார்க்: ஊஹூம், போதாது சாமி!

8க்குக் கீழ்: விண்வெளிப் பயணம் என்று வந்தால்உங்களைநிச்சயமாகக் கழித்துக் கட்டிவிடுவார்கள்!

# இரும்பு குதிரைகள்

## அத்தியாயம் 28

''யார் யாரை முட்டாள்னு சொல்றது? வெறும் கர்வம். அசட்டுக் கர்வம். சில பேர் நெனைச்சுண்டு இருக்கா. லிட்ரேச்சர் தெரிஞ்சுட்டா ரொம்ப உசத்தின்னு உலகமே துச்சம்னு. லிட்டரேச்சர் தெரிஞ்சுக்க எத்தனை நாழியாகும்? எனக்குக் கல்யாணப் பேச்சு வர்ற வரைக்கும் சமைக்கவே தெரியாது. கல்யாணத்துக்குப் பேச ஆரம்பிச்சுட்டான்னு தெரிஞ்சதும் நா சமையக் கட்டுல நுழைஞ்சேன். பருப்பு ரசத்திலேருந்து பாயசம் வரைக்கும் பார்த்துப் பார்த்துச் செய்யக் கத்துண்டேன். எண்ணி நாலு மாசம் எல்லாச் சமையலும் கத்துண்டாச்சு.

''லிட்ரேச்சருக்கும் சமையல் வேலைக்கும் வித்தியாசம் இருக்கா? எனக்குத் தெரிஞ்சு ஒண்ணுமில்லே. உங்க கிட்டயும் இந்தக் கர்வம் இருக்கு. எனக்குத் தெரியும். அதுனாலதான் அவ முட்டாள்னு சொன்னதுக்கு மாஞ்சு போறேள். முட்டாளா இருக்கறதோ கெட்டியா இருக்கறதோ டெம்ப்ரரி. பாத்த அரை மணில ஒரு ஆம்பிளைய முட்டாள்னு சொல்லணும்னா எத்தனை நெஞ்சுரப்பு இருக்கணும். ஆம்பிளையே வேண்டாம்னு நெனைக்கிற பொம்மனாட்டி போல இருக்கு. அதுனால்தான் சுரீர்ன்னு கோவம் வர்றது.''

''யம்மா... நீ எங்கேயோ போற தாரிணி.''

''எங்கேயும் போகலே. எனக்குப் பட்டதைச் சொல்றேன். அவ அப்பா இங்க வந்திருந்தப்பக்கூட சொன்னார். நாத்துல ஒருத்தர்தான் கவிதை எழுதறான்னு. கவிதை எழுதறது மட்டும்தானா ஒசத்தி? கல்யாணம் பண்ணிக் குழந்தைகள் பெத்து அதுகளை நல்லபடியா வளர்க்கறது நூறு கவிதைக்குச் சமம். மகா சிரமம். எனக்குத் தூங்கற நேரம் தவிர மத்த நேரமெல்லாம் உங்க ஞாபகம், குழந்தைகள் ஞாபகம், நம்ம வீட்டு ஞாபகம். வீடு சரியில்லாத ஒரு ஆள் என்ன கவிதை எழுதி என்ன புண்ணியம். பெண்டாட்டியைச் சரியாக் கவனிக்காதவன் எத்தனை நாவல் எழுதி என்ன...? வேஸ்ட், அத்தனையும் வேஸ்ட். இதெல்லாம் தாண்டித்தான் கவிதை, மண்ணாங்கட்டி தெருப்புழுதி....''

''கோவமாப் பேசறியா?''

''கொஞ்சம் கோவம்தான். லிட்டரேச்சர் முக்கியமாப் போனதுனாலதான் முட்டாள்னு பேச்சுக் கேட்டுண்டு வரேள். நான் சிடுசிடுன்னு பேசறது உடம்புசிரமத்தாலேயா பத்துத்தேய்க்கறேன்கற வெறுமையாலோ இல்லே. இந்த வீட்டுக்கு எவ்வளவு வேணா நான் சிரமப்படுவேன். இது என் வீடு. என் குடும்பம். என்னை, குழந்தைகளை நீங்க சரியாக் கவனிக்கலேன்னு எனக்குக் கோவம் வரும், இந்தக் குடும்பத்தை நீங்க கவனிச்சே ஆகணும். சொல்லத் தோணும். இந்த ரெஸ்பான்ஸிபிலிட்டிக்கு அப்புறம் நீங்க என்ன செய்தாலும் எனக்குச் சம்மதம், சந்தோஷம்.''

''நான் சரியாக் கவனிக்கலேங்கறியா?''

''சே, நாக்கு அழுகிப் போகும். மாடா ஒழைக்கத் தேயறபோது கண்ல ரத்தம் வரும். ஆனா ஒட்டுதல் இல்லாம சில சமயம் ஹானான்னு உட்காரும்போதுதான் பயம் வர்றது. லிட்ரேச்சர் முக்கியம் – ஆபீஸை விட குடும்பத்தை விடன்னு தோணிடுமோன்னு கவலே வர்றது.''

''சீ என்ன கவலே இது. உன்னை அழ வச்சிட்டு நான் எப்படிச் சிரிக்க முடியும்?''

''நானும் சமையல் கத்துண்டா மாதிரி நாலு மாசம் இந்தக் கவிதை அந்தக் கதைன்னு கத்துண்டு இணையாப் பேசலாம். ஆனா அதைவிட முக்கியமான வேலை உண்டு இல்லையா? இரண்டு பேரும் கவிதை கதைனு போய்ட்டாக் குடும்பம் சிரமப்படும் இல்லையா?''

விஸ்வநாதன் வாய் விட்டுச் சிரித்தான்.

''என்னா போடு போடறே. நாலு மாசத்துல லிட்ரேச்சரா?''

ஜெர்மனியில் உள்ள ஒரு நிறுவனம் 'ஜிப்' வைத்துள்ள சைக்கிள் டயரைத் தயாரித்துள்ளது. இந்த டயரை எளிதில் திறக்க முடிவதால், டியூபை வெளியில் எடுத்து விரைவில் பழுது பார்க்கலாம்!

நன்றி: கலைக் கதிர்
தகவல்: எம். ஸ்ரீதரன்



''சரி,நாலு வருஷம். அப்புறம் அப்புறம் என்ன செய்யறது? அந்தப் பொண் நாலு வருஷம் பொறுத்து என்ன செய்யும்? யாருக்காவது கழுத்தை நீட்டணுமோன்னோ...அனுசரிக்கப் போகணுமோன்னோ. அதைத்தான் சொல்றேன். அவசரப்பட்டு யாரையும் முட்டாள்னு சொல்றது. அதுவும் விட்டரேச்சரை முக்கியமா வச்சுக் தப்புன்னு.''

''அவகிட்ட நீ பேசினதைச் சொல்லணும்''

''இங்க கூட்டிண்டு வாங்கோ. நானே சொல்றேன்.''

''ச்சீ ஏதாவது முரட்டுத்தனமாப் பேசிடப் போறே.''

''வேத்து மனுஷா கிட்ட நான் ஏன் முரட்டுத்தனம் காட்டணும். நிதானமா சிரிச்சுச் சிரிச்சுச் சொல்லத் தெரியாதா? என் முரட்டுத்தனம் காட்டத்தான் நீங்க மாட்டிண்டிருக்கேளே.''

''நீ ஒண்ணும் முரடில்லையே தாரிணி.''

''பெண்டாட்டி ரொம்ப முரட்டுத்தனம் காட்டினு அசிங்கமா இருக்கும்.''

''கொஞ்சம் முரட்டுத்தனம் காட்டு பார்க்கலாம்.''

தாரிணி அவன் மேல் சாய்ந்து அவன் இடது கன்னத்தை வெடுக்கெனக் கடித்தாள்.

''ஏய் சனியனே, இதென்ன பேய் மாதிரி கடிக்கறே.''

''கடிப்பேன், கிள்ளுவேன். என்ன வேணு பண்ணுவேன்.''

''எதுக்கு தாரிணி?''

''நீங்க என் புருஷன். என் ப்ராப்பர்ட்டி''

''யம்மா... நான் ஓடிடப் போறேன்.''

''ஓடக் கூடாதுன்னு. பதிலுக்குக் கடிக்கணும்.''

''நான் கடிக்கிற ஜாதியில்லே தாயே.''

''எனக்குத் தெரியும். அதுனாலதான் முரட்டுத்தனம் காட்டாம தோள்ள மூஞ்சியைப் புதைச்சுண்டு கொஞ்சறது.''

''யப்பா! இது எவ்வளவு சுகமா இருக்கு!''

''உங்களுக்கு இந்தப் பாட்டுப் புடிக்குமா?''

''என்ன பாட்டு?''

''நீதானே எந்தன் பொன் வசந்தம்
புது ராஜவாழ்க்கை நாளை என் சொந்தம்''

''அதான் உனக்குக் கல்யாணம் ஆயிடுத்தே. அப்புறம் என்ன புதுசா ராஜ வாழ்க்கை?''

''ராஜ வாழ்க்கை வரத்தான் போறது.''

''புரியலையே.''

''திருப்பதியிலே ஆட்டம் போட்டேளோன்னோ?''

''ம்ம்.''

''குளிக்கலே. தள்ளிப் போயிடுத்து. பகவானேன்னு இது புள்ளையாப் பொறந்தா நிம்மதி. பெத்து இறக்கி உங்கக் கைல குடுத்துடறேன். அவனை என்ன வேணாப் பண்ணுங்கோ. கடைசி காலத்துல உங்களுக்கு ஒரு துணை வேண்டாமா?''

''நிஜம்மாவா தாரிணி. எனக்குத் துணை வேணும்னுதான் பிள்ளை வரம் கேக்கறியா.''

''உங்களுக்குள்ள ஆயிரம் ஆசைகள்னே கதை, கவிதை, சினிமான்னு தீர்த்துக்க முடியலே. குடும்பம் வந்தாச்சு. அவனுக்குச் சொல்லிக் கொடுங்கோ. போய் சினிமாவில தள்ளுங்கோ. முட்டி மோதி வெளியே வரட்டும். பெரியாளா நிக்கட்டும். அந்தச் சந்தோஷமாவது வேணுமில்லையா உங்களுக்கு?''

''தேங்க்யூ தாரிணி.''

''நீங்களும் வேண்டிக்கோங்கோன்னு ... பிள்ளை வேணுமின்னு.''

குலம் தரும் செல்வம் தந்திடும் அடியார்
படுதுயராயின எல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள் விசும்பருளும்
அருளொடு பெருநிலமளிக்கும்
வலம் தரும் மற்றும் தந்திடும் பெற்ற



தாயினுமாயின செய்யும்
நலம் தரும் சொல்லை நான் கண்டு
கொண்டேன்
நாராயணாவென்னும் நாமம்.

படுக்கையில் தாரிணியை அணைத்தபடி விஸ்வநாதன் பாசுரம் சொன்னான். பாரமெல்லாம் எங்கேயோ இறக்கி வைத்துவிட்டு மனைவியைச் சீராட்டினான். சீராட்டிய களைப்பில் தூங்கிப் போனான்.

"டிரைவருக்கு நாப்பது ரூபா பேட்டா. பரோட்டா குருமாவுக்குக் காணாது. அப்புறம் குடிக்கிறது எங்க. குட்டி தேடறது எங்க. பேட்டா துட்டுலதான் குடித்தனமே நடத்துறானுங்க. எல்லா டிரைவருக்கும் சம்பளம் இருநூறு முந்நூறுதான். பேட்டா துட்டு சேர்த்தா ஆயிரம் பார்க்கலாம். நடுத்தரமா ஓடு நடக்கும். ஓட்டல எல்லாத்தியும் குடுத்திட்டா வழிச் செலவுக்கு எப்படிங்கறியா? திருட்டு டீசல் துட்டு. மேல் பாரம் ஏத்தின துட்டு. ஆள் டிக்கட்டு ஏத்திக்கிறது இதுலதான் டிரைவர் க்ளீனர் சாப்பிடறது. குடிக்கறது. மத்த ஆட்டமெல்லாம். இப்ப தொட்டிய மூடிட்டான். சீலை போட்டு எடுத்தவன் நின்னு வெட்டிறலயா. ஊர்ல தொட்டி எடத்தியும் ரெய்டு பண்ணிட்டாங்க. பாதி விலைக்கு டீசல் எங்கியும் கெடைக்கல. அதுலதான் டிரைவருக்குத் துட்டு. மேல் பாரமும் எல்லா நேரமும் ஏத்த முடியுமா? பாதி வண்டிக்கே லோடு கிடைக்காதபோது மேல் லோடு எங்கன ஏத்துறது? திருட்டு டீசல்லதான் கணுவா துட்டு மிஞ்சி நிக்கும். துட்டு இல்லன்னா எவனுக்கு வண்டி ஓட்டறதுல பிடிப்பு இருக்கும். சர்த்தாம் போடான் ஓட்டு பாதிப் பேரு நாட்டுப்புறம் பாக்கப் போயிட்டான். வயித்துக்கில்லாத டிரைவருதான் ஓட்டறாங்க. அவங்க பத்துப் பேரு சேர்ந்துதான் இன்னிக்கு லாரி ஓனருக்குப் பெட்டிஷன் எழுதறாங்க.

"நம்ம வடிவேலு இல்ல. அவரு கடைல தான் கூட்டம். உங்கப்பாருதான் பெட்டிஷன் எழுதுறாரு. நாப்பது ரூபா போறாது. பேட்டா துட்டு நூறு ரூபாயா மாத்துன்னு கேக்குறாங்க. நூறு ரூபா தர மாட்டாங்க. கேக்கறதைக் கேட்டு வெக்கலாமேன்னுதான். அறுபதுக்கு ஒத்துக்குவான். அதுவும் மாட்டேன்னுட்டா ஸ்ட்ரைக்குதான். ஒருத்தனும் வண்டி எடுக்க மாட்டான். மிஞ்சி எவனு கங்காணி எடுத்தா சரசரன்னு கல்லு பறக்கும்."

காயத்ரி வாயைப் பிளந்து கேட்டுக் கொண்டிருக்க ஒரு வயதான கூலிக்காரன் அவள் எதிரே குத்துக்காலிட்டு உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தான்.

வடிவேலுவின் சிறிய கடையில் அடைத்தபடி இருபது முப்பது பேர் நின்றிருந்தார்கள். நாணு ஐயர் பெட்டிஷன் எழுதி முடித்துவிட்டு முகத்தைத் துடைத்துக் கொண்டார்.

"ஐயரு காப்பி சாப்பிட்டு வந்துரட்டும். நாங்க எங்களுக்குள்ள பேசித் தீர்மானமா ஒரு முடிவுக்கு வந்தப்பறம் மறுபடி கூப்புட்றோம். இன்னொரு பெட்டிஷன் எழுத வேண்டி யிருக்கும்."

நாணு ஐயர் வெளியேறினார்.

"ஏங்க தலைவரே! என்னாத்துக்கு ஐயரத் தூரத்திட்ட. அவரும் இருந்தா நாலு விஷயம் உபயோகமாச் சொல்வாருல்ல." ஒரு டிரைவர் நாணு ஐயர் போவதைப் பார்த்தபடி பேசினான்.

"சும்மா இருடா. எனக்குத் தெரியாது? யாரை எப்பக் கேக்கணும்னு. ஐயரு மாதிரி ஆளுங்களை எல்லா இடத்திலியும் கூட்டிக்கக் கூடாது."

"தலைவருக்குத் தெரியாதயா செய்றாரு? குறுக்க பேசாதீங்கப்பா. தலைவரே சொல்லுங்க."

"உங்க கோரிக்கைக்கு மனு எழுதியாச்சு. சாயந்திரமே குடுத்திரலாம். ஆனா எந்த



ஓனரும் கோரிக்கையக் கேப்பான்னு எனக்குத் தோணல. லாரி தொழிலு இப்ப ரொம்ப டவுனு. ரயிலு சரக்கு ரொம்ப சுத்தமா போய்ச் சேருது. முன்ன மாதிரி இல்ல. குறைச்ச ரேட்ல டக்கு டக்குன்னு ரயில்வேக் காரன் பெரும் லோடு தள்ளிடறான். லாரிய நம்பிக்கிட்டு எந்த வியாபாரியும் இல்ல. அதுனால நாம ஜெயிக்கணும்னு போராடித் தான் ஆவணும். போராட்டம்னு திருட்டுத் தனமா லாரி ஓட்டறது இல்ல. சொந்த லாரின்னு பொய் சொல்றது இல்ல. மெட்ராஸ் சிட்டில ஒரு லாரிகூட நவுரக் கூடாது. லாரி டிரைவர், க்ளீனர் மட்டுமே போராட்டத்துல ஈடுபட்டாப் போறுது. கூலித் தொழிலாளி நிலைமையும் யோசிச்சுப் பாக்கணும். ஒங்களை நம்பி இருக்கிற கூலி ஆளுங்க நீங்க ஸ்ட்ரைக் பண்ணினா பாதிக் கப்படுவாங்க, நிச்சயம். அவனுங்க லாரி ஓனர் பக்கம் சேர்ந்துட்டா ஒங்க கதி அதோ கதியாயுடும். அதுனால இன்னொரு பெட்டிஷன் கூலி தொழிலாளிங்களுக்குச் சம்பள உயர்வு கேட்டு எழுதப் போறேன். நீங்க டிரைவர், க்ளீனர் எல்லாரும் மதிப்பு பாக்காம கூலி ஆளுங்க கிட்டப் போய் பேசி டீ வாங்கிக் குடுத்து நம்ம நெலமையைச் சொல்லணும். ஒட்டு மொத்தமான போராட்டம் ஏற்படணும். அப்பத்தான் ஜெயிக்க முடியும்.''

''கூலிக்காரனுங்க ஒண்ணும் தெரியாதவனுங்க தலைவரே. நாம சொன்னாப் புரியுமா?''

''அறியாதவன்தாண்டா போராட்டத்துக்கு முதுகெலும்பு. அவன்தான் உறுதியா நிப்பான். கூடப் பத்து ரூபா கெடைச்சா நீகூடத்தான் ஆந்திராவில வண்டி ஓட்டுவே. உன்னைப் பத்தி எனக்குத் தெரியாதா?''

''அப்பக் கூலி மேஸ்திரிங்களக் கூட்டியாந்து பேசிப்புடுவோம்.''

இரவு வெகு நேரம் வரை பேசினார்கள். உரத்த குரலில் விவாதித்தார்கள்.

இருமல் வந்து சளிபிடித்து மெல்ல ஜுரம் ஏறிய குழந்தை மாதிரி தண்ணித் தொட்டித் தெரு வேதனைப் பட்டது. நடு நிசியில் ஜுர வேகம் அதிகமாகி முனகத் தொடங்கியது.

விடியலின்போது போஸ்டர்கள் தயாராகி விட்டன. டிமர் ஸ்டிரைக் என்று சிகப்பில் அறிவித்தன.

''கொஞ்சம் டைம் குடு வடிவேலு.'' காந்திலாலும் ராவுத்தரும் மற்ற ஓனர்களும் வடிவேலுவிடம் முறையிட்டனர். வடிவேலு முடியாது என்று சொல்லி விட்டான்.

சாமர்த்தியமாய் போஸ்டரில் தமிழக முதல் மந்திரியின் படமும் வடிவேலுவின் படமும் போடப் பட்டிருந்தன. முதல் மந்திரியின் சம்மதத்துடன் ஸ்டிரைக் நடப்பதாய்ப் பிரமையைக் கொடுத்தன.

''நூறு ரூபாபெட்டா குடுத்தா நான் தலை துணி போட்டுக்க வேண்டியதுதான். லாரி வாடகை ஏத்த முடியுமா? இந்த நேரத்துல மூணுவாட்டி டீஸல் விலை ஏறினதுக்கே ரெண்டு தடவைதான் வாடகை அதிகம் வாங்க முடிஞ்சுது. நஷ்டத்துல வண்டி ஓட்றம் வடிவேலு... புரியாத ஆடாத....''

''ரொம்ப ஆடினா இழுத்து மூடிட்டுப் போய்டுவேன்.''

''காஞ்சா சரியா வருவானுங்க, காந்திலால். மூடிடலாம். வடிவேலு ஆட்டம் பெரிசாப் போயிடுச்சு. நாலு நாள் தாங்காது. காய்கறி மார்க்கெட் ஜனம் கூச்சல் போட்டா தானா இறங்கிடுவானுங்க. துட்டு குடுக்க முடியாது. வண்டி எடுக்க வேணும். என்ன வேணா செய்துக்க.''

லாரி ஓனர்கள் கூட்டம் கூடி வண்டிகளைப் பத்திரமான இடத்துக்குக் கொண்டு போனார்கள்.

கூலி ஆட்கள் மனு கொண்டு வந்தபோது காந்திலால் எரிச்சலின் உச்சக் கட்டத்தில் இருந்தான்.

(தொடரும்)



New Philips Ferro Cassette now available in India.

# At last ! A cassette that won't damage your recording head

Philips, the inventors of the world's first cassette bring you a world-class cassette.

**International quality tape**

Tape that won't snap or tear or stretch; a smooth and even coating; superior tonal response; high signal-to-noise ratio. With a precision mechanism to prevent jamming and snapping of tape.

Ask for it at your Philips dealer today.




Also Philips Ferro Popular at a popular price.

**PHILIPS**




*PHILIPS—the trusted Indian household name for over fifty years.*

OBM/9435

# பரிதாபத்துக்குரிய பட்டுக்கோட்டை

'பகுத்தறிவுப் பாசறை, தேசியவாதிகளின் கோட்டை' என்றெல்லாம் எங்கள் ஊரைப் பற்றி மேடைப் பேச்சாளர்கள் பொதுக் கூட்டங்களில் புகழ்ந்து தள்ளுவார்கள்.

ஒரு காலத்தில் எங்கள் ஊரில் பாசறையும் கோட்டையும் இருந்தது உண்மைதான். ஆனால் அவை இன்று இருந்த இடம் தெரியாமல் இடிந்து வெறும் 'கோட்டை மேடாக்'க் கிடப்பதும் உண்மையிலும் உண்மை.

எங்களூர் இருபது ஆண்டுகளுக்கு முன் நகரப் பஞ்சாயத்தாக இருந்த காலத்தில் அப்போது இருந்த புண்ணியவான்களின் முயற்சியால்மேல்நிலை நீர்த்தேக்கம் கட்டி குடிநீர் வழங்கப்பட்டு வருகிறது.

1964-65ம் ஆண்டில் நகரசபையாகி 'சி' கிரேடிலிருந்து 'பி' கிரேடாகி, 'ஏ' கிரேடு அந்தஸ்தில் நின்று கொண்டிருக்கிறது எங்களூர் நகராட்சி. பட்டுக்கோட்டை நகரின் மக்கள் தொகை 60 ஆயிரத்தை எட்டிவிட்டதால் இன்றைய குடிநீர்ப் பிரச்னை 'யானைப் பசிக்குச் சோளப் பொரி' கதையாகத்தான் இருக்கிறது. குழாய் மூலம் குடிநீர் இணைப்பு கொடுக்கப் பட வேண்டிய தெருக்கள் இன்னும் ஏராளம் இருக்கின்றன. கோடை வந்து விட்டாலோ குடங்களைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு பெண்கள் காட்டாற்றில் ஊற்றுத் தோண்டிக் குடிநீர் கொண்டு வரச் செல்லும் காட்சியைத் தினமும் காணலாம்.

பட்டுக்கோட்டை நகரின் குடிநீர்க் குளங்களாகப் பாதுகாக்கப்பட்டு வந்த காசாங் குளம், ஆனை விழுந்தான் குளம் ஆகியவை பொதுக் கழிப்பிடங்களாகி, கழிவு நீர் தேங்கி, எருமைகளும், பன்றிகளும் நீச்சலடிக்கும் புனிதம் பெற்றுக் கிடக்கின்றன.

தொற்று நோய்களின் பிறப்பிடம் எது என்றால் அந்தச் சிறப்பிடம் எங்களூருக்குத் தான் கொடுக்க வேண்டும்.

கொசுக்களின் மன்னன் எங்கள் மாவட்டத்தைச் சேர்ந்த கும்பகோணத்தில்தான் இருந்ததாகக் கூறுவார்கள். மலேரியா ஒழிப்பு இயக்கம் நடந்தபோது அங்கு கொசு மன்னர்களை ஒழித்துக் கட்டிவிட்டார்கள். ஆனால் பட்டுக்கோட்டையில் கொசுக்களின் சக்கரவர்த்திகளே குடிகொண்டிருக்கிறார்கள். அவர்களின் சாம்ராஜ்யம் 'ஜாம் ஜாம்' என்று நடந்து கொண்டிருக்கிறது. யானை பலம் கொண்ட அசுர கொசுக்களும் இங்கு உண்டு. பூனைக் கால் களையுடையவர்கள் எல்லாம் யானைக் கால்வர்களாகி நிற்கும் அரிய காட்சியை இங்கே காணலாம்!

சிறு மழை பெய்தாலும் போதும்; குளம், குட்டை, ஏரிகளை யெல்லாம் எங்கள் ஊர்த் தெருக்களிலேயே காணலாம். டீக்கடைகளின் கழிவு நீரும் அதிலேயே கொட்டப் பட்டு விடுவதால் கொடுங் கோடையிலும் வற்றாத ஜீவ ஊற்றாக விளங்கும். பாதசாரிகளின் உடைகளில் பஸ்கள் சந்தனம் பூசி விடும். (பட்டுக்கோட்டை நகரின் ரோடுகளின் அமைப்பு அப்படி!)

பாதாளச் சாக்கடைத் திட்டம் பற்றிப் பல ஆண்டுகளாகக் கத்திப் பார்த்தும்

நெருக்கடி மிகுந்த பெரிய கடைத்தெருவில்...



பலன் இல்லை. கொசுக்கள் கொழுத்துப் போய் நகரம் நாற்றமெடுத்ததுதான் மிச்சம். நகரில் 4, 5 சுகாதார அதிகாரிகள் இருப்பதாகச் சொல்லிக் கொள்கிறார்கள். ஆனால் எங்களூரில் உண்மையான சுகாதார அதிகாரி பன்றியார்தான்!

பட்டுக் கோட்டை என்றாலே அதிகாரிகளுக்கு வட்டிக் கடைகள்தான் நினைவுக்கு வரும். சிறு சேமிப்புச் சேர்ப்பதற்கு நாற்றுக்கு மேற்பட்ட கடைகள். வட்டிக் கடையும் இரவு மக்கடையும் இல்லாத தெருக்களே எங்கள் ஊரில் இல்லை.

வட்டிக் கடைகளுக்கு அரசு தடை விதித்தாலும் இங்கு 'விதி' (வழி) இல்லாதவர்கள் அதிகமாக இருப்பதால் பகிரங்கமாக 'ஜாம் ஜாம்' என்று தனியார் வட்டித் தொழில் தங்கு தடையின்றி நடந்து கொண்டிருக்கிறது. அரசியல்வாதிகளுக்கும் அதிகாரிகளுக்கும் அவர்கள் தாராளமாகத் 'தட்சணை' தந்து விடுவதால் வட்டிக் கடைகள் ஏராளமாக இருக்கின்றன.

குடியரசு ஏற்பட்ட பிறகு தமிழக அமைச்சரவையில் எங்கள் ஊர்க்காரர்கள் கோலோச்சாத நாளே இல்லை. ஆனால் எங்கள் குறையைத் தீர்க்கத்தான் ஆளே இல்லை.

ஒரு காலத்தில் எங்கள் ஊரில் ஒரே தெருவில் 3 எம். எல். ஏ.க்களும் (வி. நாடிமுத்து பிள்ளை, மாரிமுத்து; எஸ். வெங்கட்ராமய்யர்) ஒரு எம். பி. யும் (ஆர். வெங்கட்ராமன்) இருந்த பெருமை எங்களுக்கு உண்டு. ஆனால் என்ன பயன்? ஒரு தொழிற்சாலை, கலைக் கல்லூரி உண்டா? 'பாலிடெக்னிக்' பார்த்தோமா?

பட்டுக்கோட்டை சமீப காலங்களில் கட்டிடங்கள் கட்டுவதில் வளர்ச்சி அடைந்திருக்கிறது. எங்கள் பகுதியைச் சேர்ந்த புண்ணியவான்கள் இங்கு வாழப் பிடிக்காமல் வெளிநாடுகளுக்கு ஓடிப்போய் இரவு பகலாக் உழைத்துச் சேமித்த பணத்தை இங்கு வந்து கட்டிடங்களாகக் கட்டி வருகிறார்கள். இதனால் சென்னை நகரத்தை விட இங்கு வீட்டு வாடகை அதிகம். மனைக் கட்டும்விலையும் மலை உச்சிக்கேபோய்விட்டது. எந்த வித உற்பத்தியும் இல்லாமல் கட்டிட வளர்ச்சியில் முன் நிற்பது எங்கள் ஊர்தான். இது வெளி நாடு போய் வந்த எங்கள் ஊர்க்காரர்கள் கட்டிக் கொண்ட புண்ணியம்.



○ காசாங் குளத்தில் சோகலிங்கம்

○ நகராட்சி இருக்கவேண்டிய இடத்தில் குப்பைமேடு!

எங்களூருக்கு எப்போதும் ஒரு சாபக்கேடு உண்டு. எங்கள் தொகுதி எம். எல். ஏ. ஆக யார் வந்தாலும் அவர் (1962க்குப் பிறகு) எதிர்க் கட்சிக்காரராகத்தான் இருப்பார். தவறிப்போய் ஆளும் கட்சிக்காரர் (1980ல்) எம். எல். ஏ. ஆனாலும் எதிர்க் கட்சிக்காரரைப் போலத்தான் நடத்தப்படுவார்; அல்லது ஒதுக்கப்படுவார். எங்கள் சட்ட மன்ற உறுப்பினர் எது செய்ய நினைத்தாலும் அது மேலிடத்தில் நடக்காது — அவர் அமைச்சராக இருந்தால் கூட.

தி. மு. க. ஆட்சிக் காலத்தில் பட்டுக் கோட்டை நகரசபை அலுவலகக் கட்டிடம் கட்ட ரூ. 1,25,000 செலவில் இடம் வாங்கி அப்போதைய அமைச்சர்களைக் கொண்டு அடிக்கல்லும் நாட்டப்பட்டது. பத்து ஆண்டுகளுக்கு மேலாகிவிட்டது. கட்டிடமும் எழும்பவில்லை, அடிக் கல்லையும் காணவில்லை. அந்த நிலத்தில் வேலிக்கருவேல மரங்கள் காடாக மண்டிக்கிடக்கின்றன.

இங்கு ஆதி காலம் தொட்டே 60 ஏக்கர் நிலத்தில் விவசாயப் பண்ணை இருந்து வந்தது. அது விவசாயப் பல்கலைக் கழகமாக மாறக்கூடிய சூழ்நிலை 1967க்கு முன் இருந்தது. இப்போது விவசாய ஆராய்ச்சிப் பண்ணை விதைப் பண்ணையாகி பலர் பயிர்ப் பண்ணையாகி, கழுதை கட்டெறும்பான கதையில் வந்து நிற்கிறது.

இங்கு இருந்த கூட்டுறவு தீப்பெட்டித் தொழிற்சாலையும் ஏற்கெனவே மூடப்பட்டு விட்டது.

கடந்த பல ஆண்டுகளாகப் பார்த்துக் கொண்டிருக்கிறோம்: 'பட்டுக்கோட்டைக்கு அந்தத் தொழிற்சாலை வருகிறது — இந்தத் தொழிற்சாலை வருகிறது' என்று பத்திரிகைகளில் அறிவிக்கப்படுகிறதே தவிர இதுவரை எந்தத் தொழிற்சாலையும் வந்ததாக இல்லை.

நகரின் முக்கிய பிரச்னையான பாதாள சாக்கடைத் திட்டம், கலைக் கல்லூரி, திருமண மண்டபம், இவை நீண்ட நாளைய கோரிக்கைகள். நிறைவேறுமா என்று ஏங்கிக் கொண்டிருக்கிறோம்.

—'ஞான தங்கபாரதி'

படங்கள்: விஜய் ஸ்டுடியோ
பட்டுக்கோட்டை

# டௌரி கல்யாணம்



இப்படி ஒரு ஆட்டம், அப்படி ஒரு ஆட்டம் என்று ஆடிவிட்டு ஒரு வழியாய் விசு தீர்மானத்துக்கு வந்து விட்டார் — ஏற்கெனவே மேடையில் பிரபலமான நாடகங்களைத் திரையாக்கம் செய்வதே பத்திரமான காரியமென்று!

மறுபடியும் மறுபடியும் வரதட்சிணைக் கொடுமையும், வேலையில்லாத் திண்டாட்டமும்தானா என்று சலித்துக் கொள்ளாதீர்கள். கொஞ்சம் பொறுமையாய் உட்காருங்கள். கொஞ்சம் கலகலப்பும், கொஞ்சம் சீரியஸ்ஸுமாய் திருப்திகரமான கல்யாணம் பார்க்கலாம்.

சண்டித்தனம் பண்ணுகிற ஒரு குரலை வைத்துக் கொண்டு விசுவால் மட்டுமே மனத்தில் படிகிற மாதிரி பிரகாசிக்க முடியும். வெகு இயல்பான நையாண்டிகள்.

பிள்ளையார் மார்க் பீடி விளம்பரத்திலிருக்கிற பிள்ளையாரைக் கும்பிடுகிற வேலையைத் தெருவோடு போகிற விசு ஆரம்பித்து வைக்க, அந்தப் பக்கம் கடக்கிறவர்களெல்லாம் கவனமாய் ஆளுக்கு மும்மூன்று தோப்புக்கரணம் போடுகிற இடம் ஒரு சுவாரஸ்யமான செருகல். கூடவே இன்னொன்று. ஆறு பக்கங்களுக்கு விசு பேசுகிற வசனத்திற்கு, ஒரு சின்னக் கண்ணசைவில் முத்திரை பதிக்கிற ஸ்ரீவித்யாஒரு மாற்று அதிகம்தான். ஒரு வருத்தம்: அந்த அபாரமான கண்களைத் தமிழில் அடிக்கடி பார்க்க முடிவதில்லையே!

ராவுத்தராய் வந்து அந்தக் குடும்பத்தில் பிரியம் வைத்து உயிர்பிரிகிறபோதும் வாக்குக் கொடுத்தபடி கல்யாணத்துக்கு மளிகைச் சாமான்கள் அனுப்பி வைக்கிற வித்தியாசமான பாத்திரம் நம்பியாருக்கு. வெகு கண்ணியமாய்ப் பண்ணியிருக்கிறார். அறிமுகச் சந்துரு இன்னும் தைரியமாய் வாயைத் திறந்து பேசலாம்,

எஸ். வி. சேகர், விஜி, வி. கே. ராமசாமி, புஷ்பலதா, இஷ்மு, வி. கோபாலகிருஷ்ணன், விஜயகாந்த் — அத்தனை பேரும் வருகிறார்கள், போகிறார்கள்; அவ்வளவுதான். மனோரமா, ராஜாமணி, அவர்களின் ஒன்பது புத்திரிகள் என்று வித்தியாசமாய்க் கொடுக்க நினைத்து அபத்தம் பண்ணியிருப்பதை மன்னிக்க மனசு வரமாட்டேன் என்கிறது. அதிலும் அந்த அப்பா சொந்தப் பெண்ணை யாரோ ஒருவனுடன் பாத்ரூமில் வைத்துப் பூட்டி, சாட்சி கூப்பிட்டுக் கல்யாணத்துக்கு நிர்ப்பந்திக்கிற இடம் அருவருப்பான கற்பனை.

எம். எஸ். வி.யின் புளித்த ட்யூன்கள் இந்தக் காதில் நுழைந்து அந்தக் காது வழியே வெளியே போய்விடுகின்றன.

வெற்றுக் கையை வைத்துக் கொண்டு முழம் போட ஆரம்பித்து, எதிர்கொள்கிற அத்தனை பிரச்னைகளுடனும் கைகலந்து தங்கை கழுத்தில் தாலி ஏறுகிறவரைக்கும் எப்படிச் சமாளித்துக் கொண்டு வருகிறார் என்பதை ஒரு இனிமையான கோர்வையாய்க் கொடுக்கிறபோது கூடியவரை நாடக வாடையைத் தவிர்த்திருக்கிறார் டைரக்டர் விசு.

விஜயகாந்த் பெட்டி நிறையப் பணத்தைத் திறந்து காட்டிய பின்புதான், 'நீ என் தம்பி மாதிரி' என்று விசு சொல்கிறபோது அவர்களுக்கிடையிலான அருமையான நட்பு, அலங்கோலமாக்கப்பட்டுத் தெருவோரக் குப்பையாய் எறியப்படும்போது சறுக்கியிருக்கிறார் அதே டைரக்டர் விசு.

எடுத்துக்கொண்ட விஷயத்தை அழுத்தமாய்ச் சொல்ல வேண்டும் என்ற பயத்தில் பிள்ளை வீட்டுக்காரர்களை இப்படி ஒட்டு மொத்தமாய்க் கீழிறக்கியிருக்க வேண்டாமோ?



# THE ADVENTURES OF THE WILDERNESS FAMILY

அன்புள்ள அம்முவுக்கு,

மஹேஸ்வரி எழுதிக் கொண்டது. இங்கு நான், அப்பா, அம்மா, விஜி, அருண் எல்லாரும் சௌக்கியம். நீ எப்படி இருக்கிறாய்?

இங்கு அப்பா நிறைய டொனேஷன் எல்லாம் கொடுத்துப் புதுப் பள்ளிக்கூடத்தில் சேர்த்து விட்டார். அதைக் கொண்டாட எல்லோரும் நேற்று ஒரு சினிமா போனோம். 'The Adventures of the wilderness family' ன்னு பேர். கதை சொல்லட்டா?

ஒரே ஒரு ஊர்ல ஒரு மாமா வேலை செய்யறாரு... அந்த மாமாவோட சின்னப் பொண்ணுக்கு ஆஸ்த்மா. இந்த மாதிரி நகரத்திலே இருந்தா அவளுக்கு உடம்பு சரியாகவே ஆகாதுன்னு டாக்டர் சொல்லிட்டாரு. மாமாவும் மாமியும் அந்தப் பொண்ணையும், அவளோட தம்பியையும் கூட்டிக்கிட்டு ஒரு காட்டுக்கு வந்து சேர்ந்துடறாங்க. இவங்க கூடவே ஒரு நாய். அப்புறம் அவங்க காட்ல எப்படி வாழறாங்கங்கறதுதான் கதை.

காட்ல இவங்களாகவே மரத்தால ஒரு வீடு கட்டறாங்க. கரடிக் குட்டி ரெண்டு இவங்களுக்கு ஃப்ரெண்ட்ஸ் ஆயிடுது. ஒரு நாளைக்கு ரெண்டு பசங்களும் சுத்திப் பாக்கப் போறச்சே ரெண்டு சிங்கக் குட்டிகளைக் கூட்டிக்கிட்டு வந்திடறாங்க. 'ஐயையோ அம்மா சிங்கத்துக்குத் தெரிஞ்சா நம்மளை யெல்லாம் அடிச்சிடும்'னு சொல்லி அந்த மாமா அந்தக் குட்டிகளைக் கொண்டு போய் விடறார். ஆனா அம்மா சிங்கம் பாத்துடுது. துரத்திக்கிட்டு வந்து மாமா மேலே ஜம்ப் பண்ணிச்சா'... நான் கண்ணை மூடிக் கிட்டேன். 'லொள் லொள்'ளு சத்தம். அப்புறம் பார்த்தா நாயும் சிங்கமும் சண்டை போடுதுங்க. ஹையான்னு கத்திட்டேன். சிங்கம் பயந்துக்கிட்டு ஓடியே போயிடுது. இன்னொரு நாள் அந்தப் பொண்ணும், நாயும் ஒநாய்ங்க கிட்டப் போய் மாட்டிக்கறாங்க. நல்ல வேளை. அந்த மாமா பெரிய துப்பாக்கி எடுத்து வந்து காப்பாத்திடறாரு. இன்னொரு தடவை அந்தப் பொண்ணை ஒரு பெரிய கரடி துரத்திக்கிட்டுப் போயிடுது. அப்பவும் நாய்தான் வந்து காப்பாத்துது. ஆனாக்கூடப் பயத்துல அந்தப் பொண்ணுக்கு ஜுரம் வந்துடுது. டாக்டரைக் கூட்டிக்கிட்டு வர்ற



துக்கு மாமா படகிலே போறாரு. வெள்ளத்திலே மாட்டிக்கிறாரு. புயல் அடிக்குது. மழை கொட்டுது. அந்தக் கரடி இவங்களைத் தேடிக்கிட்டு வீட்டுக்கே வந்திடுது. வீட்டை ஒடைச்சுப் போடுது. ஆண்ட்டி துப்பாக்கியாலே சுடறாங்க... அது தப்பிச்சுடுது. அத்தனை பேரும் பயந்து வீல் வீல்னு கத்தறாங்க. நானும்தான் பயந்து போயிட்டேன். ஆனா இவங்களுக்கு இன்னொரு பெரிய கரடி ஏற்கனவே ஃப்ரெண்ட் ஆயிடுச்சு. அது ஓடி வந்து இந்தக் கரடியோட சண்டை போடுது...

ஒரு வழியா டாக்டரோடு மாமா வந்து சேர்ந்துடறாரு. இப்பப் பொண்ணுக்கு எந்த வியாதியும் இல்லேன்னு டாக்டர் சொல்லிடறாரு. ஆண்ட்டிக்கு ரொம்பப் பயமாப் போயிடுதா? மறுபடியும் ஊருக்கே போயிடலாம்கறாங்க. ஆனா ரெண்டு பசங்களும் முடியாதுன்னு சொல்லுதுங்க. மாமாவும் முடியாதுங்கறாரு. கடைசில காட்டிலேயே இருக்கலாம்னு முடிவு பண்ணிடறாங்க. அவ்வளவுதான் கதை.

சினிமாப்பார்க்கக் கௌம்பறப்போ பாட்டி 'இங்கிலீஷ் படமெல்லாம் கூட்டிக்கிட்டுப் போவாதேடா. குழந்தை கெட்டுடும்'னு அப்பா கிட்டச் சொன்னாங்க. 'தமிழ்ப் படம் பாத்தாத்தான் கெட்டுப் போவா'ன்னு அப்பா பதில் சொன்னாரு.

எனக்கு இந்தப் படம் ரொம்பப் பிடிச்சுது.

உங்க ஊருக்கு வந்தா நீயும் போய்ப் பாரு. என்ன?

இப்படிக்கு, மகேஷ்

# காட்டில்



# ஒரு குடும்பம்

—ஜெயமன்மதன்

# எனக்கொரு வரம் வேண்டும்

—— சுபா ——



சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்தேன். உடம்பில் ஒரு பரபரப்பு. ஒரு வெம்மை. படித்துக் கொண்டிருந்த புத்தகத்தை மடியில் கவிழ்த்துக் கொண்டு பார்வையை மறுபடியும் கேட் பக்கம் திருப்பினேன். இந்த வராந்தாவிலிருந்து நேரே தெரு தெரிந்தது. சௌம்யாதான்.

டாக்ஸியின் கதவை அவள் அம்மா திறந்து பிடித்திருக்க மெல்ல ஒட்டோடு நகர்ந்து வெளியே வந்து தரையில் காலை வைத்து அவள் நிமிர்ந்தபோது தான் அவளை மறுபடியும் பார்க்க முடிந்தது.

சௌம்யாவேதான்!

'ஏதாவது செய்யேன்' என்று உடம்பு பரபரத்தது.

''வாங்கோ...'' என்று எதிரில் போய் அழைக்கலாமா? முகத்தைத் திருப்பிக் கொண்டு அவள் போய் விட்டால்? இன்று வரை ஒரு வார்த்தைகூட அவளுடன் பேசியிராததில் அதற்கான தைரியம் கூடிவர வில்லை. யாரிடமாவது அவள் வருகையைச் சொல்ல வேண்டும் போல இருந்தது. சட்டென்று எழுந்து நாற்காலியில் புத்தகத்தைக் கவிழ்த்துவிட்டுக் கதவைத் திறந்து கொண்டு வீட்டிற்குள் போனேன்.

''அம்மா...''

''என்னடா?'' என்று பாத் ரூமிலிருந்து குரல் வந்தது. சமையலை முடித்துவிட்டு அம்மா அப்போதுதான்குளிக்

கப் போயிருந்தாள். திடுமென்று ஒரு கூச்சம் மனத்தைத் தழுவி, சொல்ல வந்ததை மனத்தோடு நிறுத்தியது.

''ஒண்ணுமில்லேம்மா... குடிக்க வெந்நீர் எங்க வச்சிருக்கேன்னு கேக்கத்தான் வந்தேன்'' – குரல் தரைந்து போயிருந்தது.

''இப்பத்தானே ரெண்டாந் தரம் காப்பி குடிச்சே...? அரை மணி நேரம் சேர்ந்தாற்பல உக்காந்து படிச்சாத்தானே? போகக் குன்னு எழுந்து வந்துடு... பரீட்சை எப்படி பாஸ் பண்ண முடியும்?''

பதில் சொல்லாமல் வராந்தாவுக்கு வந்தேன். மூலை நாற்காலிக்குப் போனேன். டாக்ஸி கிளம்பிக் கொண்டிருந்தது. இறக்கி வைத்த பெட்டிகளில் ஒன்றையும், சின்னக் கூடையையும் சௌம்யாவின் அம்மா எடுத்துக்கொள்ள, சௌம்யா இன்னொரு பெட்டியை எடுக்கக் குனிந்தாள்.

''சௌம்யா... நீ ஒண்ணும் வயித்தில பாரத்தை வச்சிண்டு தூக்க வேண்டாம். பேசாம இரு'' என்று அவளின் அம்மா அதட்டல் போட்டாள்.

நான் சடாரென்று எழுந்தேன். கையில் இருந்த புத்தகம் விரிந்தவாக்கில் கீழே விழுந்தது. கேட்டுக்கு விரைந்தேன்.

''இப்படிக் கொடுங்கோ பெட்டியை!'' என்று சௌம்யாவிடமிருந்து பிடுங்கிக் கொண்டேன். இன்னொரு பெட்டியை மற்றொரு கையில் எடுத்துக் கொண்டு விடுவிடுவென்று நடந்து அவர்களின் வீட்டு வராந்தாவில் கொண்டு வைத்தேன்.

''சௌம்யா... எப்படிம்மா இருக்கே?''

மேலேயிருந்து அன்பு தடவின குரல். மூன்றும் மாடியிலிருந்து மிஸஸ் ஜோஷி எட்டிப் பார்த்துக் கேட்டாள்.

சௌம்யா அண்ணாந்தாள். ''நல்லா இருக்கேன்.'' கிண்கிணி. கிண்கிணி. வெண்கல மணியில் தங்க நாக்கின் ஒத்தடம். அப்புறம் ஒரு புன்னகை.

நகர்ந்தாள். வாசலில் நின்று கொண்டாள். உள்ளேயிருந்து ஆரத்தித்தட்டு வந்தது. அம்மாவும், பாட்டியும்செந்நீரை இப்



படியும் அப்படியுமாய் வலம் காட்டி உள்ளே அழைத்துக் கொண்டனர்! நான் வெளியே அநாதையாய் நின்றேன்! சௌம்யா இன்னும் எத்தனை நாள் இருப்பாள்?

அந்த நாள் இருக்கிறதே!

க்ஷணத்துக்கு க்ஷணம் நினைவிருக்கிறது. குளித்துவிட்டு இடுப்பில் துண்டோடு கண்ணாடி முன் நின்று தலையில் சீப்பைத் திருகித் திருகி ஓட்டிக் கொண்டிருந்த அந்த ஒன்பது மணிக்கு எதிர் வீட்டுக்காரி ஜன்னல் வழியாய்ப் பார்த்தாள்.

'உங்களுக்கு ஃபோன்' என்று சைகையில் சொன்னாள். அவசரமாய் இடுப்பில் வேஷ்டியைச் சுற்றிக் கொண்டு போய்ப் பேசினேன். அப்பாதான். ஆபீஸிலிருந்து. அப்பா மறந்து விட்டுப் போன கண்ணாடியைப் பற்றிப் பேசினார். பேசி முடித்துவிட்டு — 'உடனே எடுத்துண்டு வந்துடு' — 'சரிப்பா' —

பக்கத்தில் நாற்காலியில் உட்கார்ந்திருந்த பாட்டிக்கு 'தேங்க்ஸ்' என்று முணு முணுத்து விட்டு வாசலைத் தாண்டுகையில் சௌம்யா நேர் எதிரே நுழைந்து கொண்டிருந்தாள். சரே லென்று விலகி விட்டாள்.

படபடவென்று வீட்டுக்கு வந்த பின்னரும் அந்த முகமும் அந்தத் தோரணையும் மனசு முழுக்க வியாபித்திருந்தது.

என்ன அழகு அது! ச்...ச்... என்னைவிட ஒரு அங்குலம் கூடுதல் உயரம். உருண்டையான முகம். ஆரோக்கிய சிவப்புடன் கன்னங்கள். ஈரம் பளபளக்கிற சின்ன உதடுகள். விரல் வைத்து நீவி விட்ட மாதிரி ஒழுங்காய்க் கிளம்பிச் சற்றே விகசித்த நாசி. தனித்து நில்லாமல் முகத்தோடு ஒட்டிப் பின்புறம் மடிகிற காதுகள். கொத்தான கூந்தல்.

போன வருடம் இடி விழுந்தது!

சௌம்யாவுக்குக் கல்யாணம். அவள் பார்வையிலிருந்து பிரிந்து வெகு தூரம் விலகப் போவது மனசுக்கு மிகுந்த ஏமாற்றத்தைக் கொடுத்தது. அவள் கிளம்பிப் போன பிறகு தான் என் வாழ்வில் வரிசையாய் சூன்யங்கள் அணிவகுத்தன.

அன்றுவரை வகுப்பில் முதலில் நின்றவன் சடாரென்று காரணமில்லாமலே இறுதிப் பரிட்சையில் கோட்டை விட்டேன்.

மெல்லிசைக் குழுவில் சேர்ந்து பாடுவது என்பது நித்திய துக்கத்திலிருந்து தப்பிக்கத் தான் என்று குடும்பத்தினருக்குப் புரியவில்லை.

சௌம்யா எப்பொழுது பார்த்தாலும், வீட்டு வாசலில் டிரான்சிஸ்டரை வைத்துக் கொண்டு சினிமாப் பாடல்களில் லயித்திருப்பதைப் பார்த்த பின்தான் என் குரல் திறமையை வெளிச்சத்துக்குக் கொண்டு வரப் பிரியப்பட்டேன் என்பது யாருக்கும் தெரிய வேண்டிய அவசியமில்லை.

அவளிடம் என்ன எதிர் பார்க்கிறேன்? தெரியவில்லை. ஏதோ எதிர்பார்க்கிறேன்.

சட்டென்று கதவு திறக்கிற ஓசை கேட்டுத் திடுக்கிட்டுப் போனேன். அம்மாதான்.

''எதிர்த்த வீட்டுப் பெண் வந்திருக்காம்மா...?'' என்றேன்.

''சௌம்யாவா?''

''ஆமா'..''

அம்மா வாளியை அப்படியே கீழே வைத்து விட்டு எதிர் வீட்டில் நுழைந்தாள்.

''படிக்கறதுக்கு ஏதாவது புஸ்தகம் இருந்தாக் கொடுங்களேன்...''

மறுபடியும் அந்தக் கிண்கிணி. அதுவும் என்னிடமே. நான் துள்ளி எழுந்தேன்.

''வாங்கோ.... வாங்கோ....'' என்றேன், நாக்குழறிற்று.

கைபதற எனக்குப் பிடித்த இரண்டு புத்தகங்களைத் தேடி எடுத்துக் கொடுத்தேன்.

''உள்ள வாங்களேன்...''

''பரவாயில்லே.... படிச்சிண்டிருந்தீங்க போலருக்கு... டிஸ்டர்ப் பண்ணிட்டேனா?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே...''

''டீவிலெல்லாம் பாடறீங்களாம், அம்மா சொன்னாங்க....''

''ஆமாம்...சந்துருஸ் ட்ரூப்ல பாடறேன். போன வாரம் டீ. வி.லே சான்ஸ் கெடைச்சுது.''

''ரொம்ப நல்லாப் பாடுவீங்கன்னு அம்மா சொன்னாங்க. நெக்ஸ்ட் ஏதாவது ப்ரோக்ராம் இருந்தாச் சொல்லுங்க. நான் வரேன்.''

''படிச்சிக்கிட்டிருக்கியாப்பா?''

''ஏன் மாமி?''

''சௌம்யாவுக்குப் போரடிக்கிறதாம்... அவளோட வந்து கொஞ்சம் காரம் விளையாடிட்டிறேன்... எனக்கு என்ன தெரியறது கேரமும் இன்னொண்ணும்...''

''போயிட்டு வாடா... பாவம் பிள்ளைத் தாய்ச்சி... பிறந்த வீட்டுக்குச் சீர் கொண்டாட ஒன்பதாம் மாசம்தான் வந்திருக்கு.... சாயந்திரம் படிச்சுக்கலாம். போயிட்டு வா.''

அவளால் தரையில் அமர முடியவில்லை என்று இரண்டு பக்கமும் நாற்காலிகளை இழுத்துப் போட்டு இடையில் சின்ன மேஜையில் காரம் போர்டை இருத்தி நடுவில் காய்களைப் பூவாய் விரித்தேன்.

அவள் ஸ்ட்ரைக்கரைத் தட்டுகிற போதெல்லாம் முழங்கை வரை அடுக்கின கண்ணாடி வளையல்கள் 'கிளுங்' கிளுங்' என்று நகைத்தன. நெற்றியில் புருவங்களுக்கிடையில், கண்களுக்குக் கீழ், கன்ன மேட்டில் என்று பொடித்திருந்த வியர்வைத் துளிகள் பளபளத்து ஜாலம் புரிந்தன. முகமே சற்றுப் பூசின மாதிரி செழித்திருந்தது.

''ரொம்ப நல்லா ஆடறீங்களே? எங்கேயோ இருக்கிற காயினெல்லாம் டொக்கு டொக்குன்னு பாக்கெட்ல போட்டுடறீங்களே... நான் எப்படி ஜயிக்கிறதாம்?''

''நீங்களும் நல்லாத்தான் ஆடறீங்க...'' என்றேன் சற்று அடிபட்ட குரலில்.

''இன்னும் சில கட்ஸெல்லாம் சொல்லிக் குடுங்களேன்... அந்த வெள்ளைக் காயினை எப்படி பாக்கட்ல போடலாம்?''

''கையை எடுத்துக்குங்க.''

அவள் ஸ்ட்ரைக்கரிலிருந்து விரலை எடுத்துக்கொள்ள, சற்று எம்பி அதை நகர்த்தி அவள் கோட்டில் சரியான இடத்தில் வைத்தேன்.

''இந்தக் காயினைப் பார்த்து மெதுவாத் தட்டி விடுங்க'' என்று சொல்லிக் கொண

# முந்துங்கள்!
# இந்த அரிய வாய்ப்பை நழுவ விடாதீர்கள்!

## மிகக் குறைந்த விலையான ரூ 12.25-க்கு யூனிட் விற்பனை ஜூலையில் மட்டுமே.

மீண்டும் நினைவுபடுத்துகிறோம். இந்த குறைந்த விலையில் நீங்கள் யூனிட்டுகளை இதுவரையில் வாங்கவில்லையென்றால் இந்த வாய்ப்பினை ஜூலை 31க்குள் பயன்படுத்திக் கொள்ளுங்கள். குறைந்த விலையில் இப்பொழுதே முதலீடு செய்து யூனிட்டுகளின் பிரத்யேக நன்மைகளான பாதுகாப்பு, எளிதில் பணமாக்கும் வசதி, வரிச் சலுகைகள் மற்றும் அதிக டிவிடெண்ட் இவற்றை அனுபவியுங்கள். 1982-83 ஆம் ஆண்டிற்கான யூனிட் டிவிடெண்ட்-13.5%. விவரங்களுக்கு அரசுடைமையாக்கப்பட்ட வங்கிகள், தலைமை தபால் நிலையங்கள் மற்றும் எங்களது தலைமை பிரதிநிதிகள் அல்லது ஏஜெண்டுகளை அணுகுங்கள்.

முந்துங்கள்! வருடத்திற்கு ஒரு முறை கிடைக்கும் இந்த அரிய வாய்ப்பினை நழுவ விடாமல் இன்றே யூனிட்டுகளை வாங்குங்கள். 1982-83 ஆம் ஆண்டிற்கான டிவிடெண்ட் 13.5% என்பதை மறவாதீர்!



**யூனிட் ட்ரஸ்ட் ஆப் இந்தியா**

தலைமை அலுவலகம் : பம்பாய்
(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்)
பிராந்திய செயலகம் :
ரெஜினு மான்ஷன், 46 செகண்ட் லைன் பீச்
சென்னை-600 001. போன் : 27433

Sista's-UTI. 126.83 TM A

## உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்.

எங்கள் முக்கிய பிரதிநிதிகள் :

திரு. ஏ. தனபால், 10-தேஜ ஹைவேர் ரோடு கோவை-641 018, போன் : 34776
திரு. எம். ராமமூர்த்தி, 30 எல்.ஐ.சி. காலனி மதுரை-625 002, போன் : 30160
திரு. கே. முத்துசாமி, 52-ஏ வ.உ.சி. நகர் தஞ்சாவூர்-613 007, போன் : 1224
திரு. என். கே. இங்கர் சால், 155, கள்ளும்பிலை தெரு அன்னதானப்பட்டி சேலம்-636 002 போன் : 64302 P. P.
திரு. எம். எம். காஜா, பக்காளி பில்டிங் அனெக்ஸ் 41-பி, திருவனந்தபுரம் நெடுஞ்சாலை
பாளையங்கோட்டை-627 002 போன் : 4520, வீடு 5395

டிருக்கிறபோது அவனும் ஸ்ட்ரைக்கரில் கைவைக்கச் சட்டென்று ஒரு விரல் நகத்தில் ஸ்பரிசித்தது. அக்னித் துண்டு கையில் பட்ட மாதிரி சட்டென்று கையை இழுத்துக் கொண்டேன்.

''ஸாரி...'' என்று சொல்ல வாய் திறந்து சட்டென்று நிறுத்திக் கொண்டேன்.

அவனை நிமிர்ந்து பார்த்தபோது அவன் எந்த வித சலனமும் இல்லாமல் அந்தக் காயினைப் பாக்கெட்டில் தள்ளுவதிலேயே கண் குத்தியிருந்தான். ஆனாலும் நெஞ்சில் முள் குத்திக் கிழித்தது. வெள்ளைப் பஞ்சில் கறுப்புப் புள்ளி படிந்து விட்ட மாதிரி வருந்திற்று. இதற்கு ஒரு தண்டனை விதித்துக்கொள்ள வேண்டும் என மனசு நிர்மானித்தது. இன்றைக்கு ராத்திரிச் சாப்பாடு வேண்டாமே!

எதிரில் கூட்டம். சபை நிறைய! ஏர் கண்டிஷனர் வேலை செய்யாததில் கூடுதலாய்ப் புழுங்கிக் கொண்டிருந்தது. போட்டிருந்த மெலிதான சில்க் ஜிப்பா உடம்பில் வியர்வையுடன் படிந்து ஒட்டிக் கொண்டிருந்தது. நான் சற்றுப் பதட்டமாய் உணர்ந்தேன்.

திரை விலகியதும் இரண்டாவது வரிசையில் பிரம்பு நாற்காலியில் சௌம்யா தளர்வாய் உட்கார்ந்திருந்தாள். இந்தப் பக்கம் அவளுடைய அம்மா. அந்தப் பக்கம் நெடு நெடுவென்ற உயரமும், அடர்த்தியான மீசையுமாய் அவள் கணவன்.

திரை விலகினதும் அந்த மூன்று ஜோடிக் கண்களும் மேடையில் என்னைத் தேடுவதைப் பார்த்தேன்.

நான்காவது பாடல் என் பாடல். என் முறை. நான் கண்களை மூடிக் கொண்டேன். மெலிதான வயலின் இழுப்பு அடங்கிற்று. அரை நொடிக்கு முழு நிசப்தம்.

...வீணையடி நீ எனக்கு,
மேவும் விரல் நானுனக்கு;
. . . . . . .
முல்லைநிகர் புன்னகையாய்!
மோதுமின்பமே! கண்ணம்மா!...

பாட்டைப் பாடி நிறுத்தினேன். கை கூப்பினேன். கும்பிட்டது என் சுந்தரத் தேவதையை. கண்களை மெல்லத் திறந்தேன். சௌம்யாவின் கைகள் படபடவென்று பொரிந்து கொண்டிருக்க, சடாரென்று முகத்தில் ஒரு இழுப்பு. வேதனை இழுப்பு. கணவனைத் தொட்டு உலுக்கி அவன் தோளில் சாய்ந்தாள்.

மயக்கம் வருகிற மாதிரி இருந்தது. மெல்லச் சமாளித்தேன். சந்துருவின் காதருகில் குனிந்தேன்.

''இனிமே என்னால இன்னிக்குப் பாட முடியாது சந்துரு...''

மேடையிலிருந்து விலகினேன். மேடை விலகினதும் தடதடவென்று ஓடினேன். அதற்குள் கார் புறப்பட்டிருந்தது.

அன்றைக்கு ராத்திரி முழுக்கத் தூக்கமில்லை. எழுந்து நர்ஸிங் ஹோமிற்கே போய் விடலாம் போல உடம்பெல்லாம் ஒருதுடிப்பு. மெதுவாய், மிக மெதுவாய் விடிந்தது. காபி குடித்தவுடன் நர்ஸிங் ஹோமிற்கு ஓடினேன்.

சௌம்யா முகம் சற்றுக் கலங்கித் தளர்ந்து படுத்திருந்தாள்.

''வாங்க...'' என்று மெலிதாய்ப் புன்னகைத்தாள்.

தொட்டிலில் கண் ஓடிற்று.

அழகான, சிவப்புப் படிந்த சின்னப் பிஞ்சு ஒன்று கண் மூடியிருந்தது.

''கங்கிராஜுலேஷன்ஸ்...'' என்றேன் வார்த்தை கடிபட.

மனசுக்குள் சின்னக் குறுகுறுப்பு. குழந்தையின் இடுப்பு மூடப்பட்டிருந்ததில் அது ஆணா பெண்ணா என்று புரியாத துடிப்பு.

சௌம்யா புரிந்துகொண்ட மாதிரி ''ஆம்பிள்ளைக்காகப் பொறந்திருக்கான்'' என்றாள்.

''பேர் கூட நிச்சயம் பண்ணிட்டோம்.''

நான் மௌனமாய் அவளைப் பார்த்தேன்.

''தனஞ்செயன்... நல்ல பேரு இல்லே?''

பளிச்சென நிமிர்ந்தேன். தனஞ்செயன்... தனஞ்செயன். என் பெயரா? என் பெயரையா அந்தக் குழந்தைக்கு வைப்பதாகத் தீர்மானம் ஆகியிருக்கிறது? என்னவோ எதிர்பார்த்தேன் என்று நினைத்தேனே, அது இதுதானோ? நெஞ்சம் நிறைந்து போயிற்று. என்னை அறியாமல் கண்ணில் நீர் முட்டிக் கொண்டு கன்ன மேட்டில் இறங்கிற்று.

'நீ மிகவும் கொடுத்து வைத்தவன் தனஞ்செயன்' என்று மனம் உரக்கக் கூவிற்று.

இனி எந்த க்ஷணம் வேண்டுமானாலும் என் இதயம் நின்று போகட்டும். கவலையில்லை! எனக்கு வரம் கிடைத்து விட்டது!




## கார் திருட்டைத் தடுக்க...

கார் திருடர்கள் முதன் முதலில் செய்வது திருடிய காரின் நம்பர்ப் பிளேட்டை மாற்றுவதுதான். இது மிகவும் சுலபம்; திருடிய காரைப்பயமில்லாமல் ஓட்டிச் சென்று விற்றுவிடலாம். இதைத் தடுக்க இப்பொழுது பிரிட்டனில் ஒரு வழி கையாளப் படுகிறது. அதாவது கார் ஜன்னல் கண்ணாடிகளில் கார்நம்பரைப்பொறித்து விடுகிறார்கள். இதை அழிக்க முடியாது. ஜன்னல் கண்ணாடிகளை மாற்றிவிட்டுத்தான் விற்க வேண்டும். இது அவ்வளவு சுலபமல்ல. இவ்வாறு கார் நம்பர்களைச் சொந்தக் காரர்களே பொறித்துக் கொள்ளத் தேவையான கருவிகளையும் விற்கிறார்கள்!

தகவல்: ரிஸர்ச் அண்ட் ரெபரன்ஸ்

# ஒன்று



ஒன்றான பரம்பொருளில் இருந்துதான் இவ்வுலகம் தொடங்கி, இயங்கி, ஒடுங்கிப் போகிறது. ஒரே மண்ணிலிருந்துதான் பல பாத்திரங்கள் செய்யப் படுகின்றன. ஒரே தங்கத்திலிருந்துதான் பலவித ஆபரணங்கள் செய்யப்படுகின்றன. ஒரு சந்திரன்தான் கண்ணில் தோஷம் உள்ளவனுக்குப் பல சந்திரன்கள் இருப்பது போலத் தோன்றுகிறது. ஒரே உருவம்தான் கண்ணாடிகளில் ஆயிரம் உருவங்களாகத் தெரிகின்றது. ஒன்று என்கிற எண்ணோடு எத்தனை பூஜ்யங்கள் சேர்த்தாலும் அத்தனையும் எண்ணிக்கையாக வளருகிறது. ஒன்று என்ற எண்ணை எடுத்துவிட்டு எத்தனை பூஜ்யம் போட்டாலும் அதற்கு ஒரு பயனும் இல்லை. அது போல ஒரே பரம்பொருளான பரமாத்மாவை ஆதாரமாக வைத்துத்தான் இத்தனை உலகங்களும், இத்தனை பிராணிகளும், இத்தனை மனிதர்களும் இருந்து வருகிறார்கள். ஒரே ஒரு மின் நிலையத்திலிருந்துதான் பல வீடுகளுக்கும், பல தொழில் ஸ்தாபனங்களுக்கும் மின்சாரம் வருகிறது. ஒரே உடம்பை வைத்துத்தான் பலவித உறுப்புக்கள் பலவித பணிகளைச் செய்கின்றன. ஒரே ஒரு சூரியன்தான் உலகம் முழுவதிலும் பகலாகவும், இரவாகவும் மாறி மாறி வந்து கொண்டிருக்கிறான். ஒரே ஒரு பரம்பொருளின் ஆத்மா ஒவ்வொரு ஜீவராசிகளிடத்திலும் மனிதன் முதல் தேவர்கள் வரை அனைவருடைய உள்ளத்திலும் ஆன்மாவாகப் பிரதிபலிக்கிறது.

உண்மை அழியாதது. ஒரே மாதிரியாகத் தான் இருக்கும். இரண்டு என்ற எண்ணிக்கை வந்து விட்டால் ஆசை, பயம், கோபதாபங்கள் முதலியவை எல்லாம் வந்துவிடும். பலர் சேர்ந்து ஒரு காரியம் செய்தாலும் அதனை ஒருமனத்தோடு செய்தால் நல்லபடியாக நடக்கும். ஆனால் ஒரு மனிதனே பல சிந்தனைகளுக்கும், பலவித செயல்களுக்கும் இடம் தரும்போது வாழ்க்கையில் குழம்புகிறான், துன்பப்படுகிறான். பலவித பூக்களைக் கட்டி, மாலையாகத் தயார் செய்து, பலவித பணிகளுக்கும் உபயோகப் படுத்துகிறோம். ஆனால் அத்தனை பூக்களையும் ஒன்றுபடுத்தி அழகுபடுத்துவது ஆதாரமான நார்தான். ஒரு மாங்கொட்டை மரமாகி, கனிகளை ஈந்து, மேலும் நூற்றுக் கணக்கான மரங்கள் உண்டாவதற்கும் காரணமாகிறது. ஒரே பரமாத்மாதான் பல வடிவங்களை எடுத்து மக்களையெல்லாம் ஆட்கொண்டு அருள் பாலிக்கிறது. ஒரே சமுத்திரத்தில்தான் பல திசைகளிலிருந்து வரும் பல பெயர்களைத் தாங்கிய நதிகள் சங்கமிக்கின்றன. பலவித இனிப்புப் பண்டங்கள் இருந்தாலும், பெயரும் உருவமும் மாறினாலும் எல்லாவற்றிற்கும் அடிப்படை ருசி இனிப்புத்தான். ஆக இவ்வுலகில் ஒன்று என்ற எண்ணுக்குத்தான் பெருமை. அந்த ஒன்றுதான் பரம்பொருள். பரமாத்மா, பராசக்தி என அதுவே பல பெயர்களால் அழைக்கப்படுகிறது. ஆகவே ஒவ்வொரு மனிதனும் கடவுளின் பல வடிவங்களையும் ஏற்று, வழிபட்டு ஒன்றான மெய்ப் பொருளையே இலட்சியமாக அடைய வேண்டும். ஒன்றை எண்ணு! அதுவும் ஒன்றே என்று எண்ணு! ஒன்றிடம் நின்று!

**-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
பீடாதிபதி ஜயேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய சுவாமிகள்**

# குப்புசாமியா கொக்கா?

முகுந்தன்

### காட்சி 1

(அற்புதா அண்ட் கம்பெனியின் விசாலமான ஹால். ஊழியர்கள் மும்முரமாக வேலை பார்த்துக் கொண்டிருக்க, குப்புசாமி மட்டும் ஃபைலுக்குள் எதையோ மறைத்து வைத்து, திருட்டுத்தனமாகப் படித்துக் கொண்டிருக்கிறார். இதோ மானேஜர் நாராயணன் ஓசைப் படாமல் எதிரில் வந்து இடுப்பில் கை வைத்துக்கொண்டு நிற்கிறார். அப்போதும் குப்புசாமியின் சவனம் கலைந்தபாடில்லை. நாராயணன் மெல்லக் கனைக்கிறார். ஊஹூம்; பயனில்லை.)

நாராயணன்: குப்புசாமி! என்னய்யா அது, அத்தனை சுவாரஸ்யமாகப் படிக்கிறீர்? நிச்சயம் ஆபீஸ் ஃபைலாக இருக்க முடியாது! எங்கே, இப்படிக் கொடும், பார்க்கலாம்!

குப்புசாமி: (சட்டென்று ஃபைலை மூடி மேஜை டிராயரில் திணித்துவிட்டு): உம்... அது... வந்து... சார்... ஹெட் ஆபீஸ்... டிஸ்கோ டான்... ஸாரி, அதாவது இளையராஜா... அதுவுமில்லை...கம்ப்ளெய்ண்ட்ஸ் ஃபைல் சார்!...

நாரா: என்னய்யா உளறுகிறீர்? அந்த ஃபைல் என் மேஜை மேலே அல்லவா இருக்கிறது!.. இப்போது கூடப் பார்த்துவிட்டு வந்தேனே! அது எப்படி உம்ம கைக்கு அதற்குள்ளே வந்திருக்க முடியும்?... ஹூம்!

குப்பு: சார்! நீங்க பார்த்தது நமக்கு வந்த கம்ப்ளெய்ண்ட்ஸ் ஃபைல்! இது நாம் கொடுத்த கம்ப்ளெயிண்ட்ஸ் ஃபைல்!

நாரா: அப்படி ஒரு ஃபைல் இருப்பதே எனக்குத் தெரியாதே! எங்கே நான் பார்க்கட்டும் அதை! (டிராயரிலிருந்து ஃபைலை எடுக்கிறார். அதற்குள்ளிருந்து தொப்பென்று விழுகிறது சினிமாப் பத்திரிகை ஒன்று!)

நாரா: ஓகோ! ஆபீஸ் நேரத்திலே சினிமாப் பத்திரிகை படிக்கிறீரா? உம்ம கிட்ட அம்பது ஃபைலுக்கு மேலே குவிஞ்சு போயிருக்கு!... உம்மை என்ன செய்தால் தேவலை?

குப்பு: சார்! சார்! இதுதான் சார் நான் முதன் முதலா படிக்கிற சினிமாப் பத்திரிகை!

(அவரது பக்கத்துச் சீட்டில் அமர்ந்திருக்கும் டைப்பிஸ்ட் ஜலஜகுமாரி குறுக்கிடுகிறாள்.)



ஜலஜகுமாரி: ஆமாம் சார்... இவர் சினிமா பத்திரிகை படிக்கிறது இதுதான் முதல் தடவை... வழக்கமா துப்பறியும் நாவல் தான் சார் படிப்பார்!

நாரா: ஐ ஸீ! அதனாலேதான் ஏகப்பட்டது பெண்டிங்லே வச்சிருக்கீர்!

குப்பு: நான் எப்படியும் இந்த ஞாயிற்றுக் கிழமை வந்து உட்கார்ந்து எல்லா ஃபைல் களையும் ஊதித் தள்ளிடறேன் சார்!

நாரா: ஆபீஸ் நேரத்திலே நாவல், பத் திரிகைன்னு படிக்கிறது. ஞாயிற்றுக்கிழமை வேலே பண்ணி 'ஓவர்டைம்' போடறது... என்னய்யா ஊழல் இது!

குப்பு: என் பேரிலே தப்பில்லே சார். போன வாரமும் அதுக்கு முந்தின வாரமும் கூட ஞாயிற்றுக் கிழமையிலே ஆபீசுக்கு வர்ற தாகச் சொன்னேன்... நீங்கதான் வேண் டாம்னு சொல்லிட்டீங்க.. அதனாலேதான் பெண்டிங்... இந்த ஞாயிற்றுக் கிழமை...

நாரா: நீர் வரக்கூடாது!

குப்பு: ஓவர்டைம் வேண்டாம் சார்! ஃப்ரீ யாவே ஒர்க் பண்ணிட்டுப் போறேன்!

நாரா: வேண்டாம்யா! நான் சொல்றதைக் கேளும்! லேபர் இன்ஸ்பெக்டருக்குத் தெரிஞ்சால் வம்பு!

குப்பு: சார், ப்ளீஸ்! இந்த ஒரே ஒரு ஞாயிற் றுக் கிழமை....

நாரா (சற்று யோசித்து): சரி, வந்து தொலேயும். ஆனா ஒண்ணு: பதினெரு மணிக்கு வந்துட்டு டாண்ணு மூணு மணிக்கு மூட்டையைக் கட்டிடணும்... புரிஞ்சுதா?... நானும் வருவேன். நீர் ஒழுங்கா வேலே செய்யறீரான்னு பார்க் கறதுக்கு... ஓ.கே?

(நாராயணன் போகிருர்.)

குப்பு (டைப்பிஸ்டிடம்): அம்மா! கலக குமாரி! இப்போ திருப்தியாச்சா? மானே ஜர் மகாபாவி கிட்டே வத்தி வச்சுட்டே இல்லே!

ஜல: நான் உண்மையைத்தானே சார்சொன் னேன்? எதுக்காகக் கோபிச்சுக்கிறீங்க?

குப்பு: நீ ஆபீஸ் ஜெம் கிளிப்பைப் பெட்டி பெட்டியாத் தூக்கிக்கிட்டுப் போய் அப் துல் ரஜாக் கடையிலே அரை விலேக்கு விக்கிறியே — அந்த உண்மையை நான் சொல்லட்டுமா? திருச்சியிலே இருக்கிற உங்க அத்தைக்கு ஆபீஸ் ஃபோன்லே எஸ். டி. டி. போட்டு வம்பளக்கிறியே— அந்த உண்மையைச் சொல்லவா?

ஜல: சார்! நான் சொல்றேன்னு கோவிச்சுக் காதீங்க. நீங்க பெரியவங்க, சீனியர்...



நீங்கதான் சார் நேர்மையா நடந்து, எங்களுக்கெல்லாம் வழி காட்டணும்!

குப்பு: சரிசரி! நடக்கிற காரியத்தைப் பத்திப் பேசுவோம்! மானேஜர் என்ன கெடுபிடி பண்றார் பாத்தியா?... அவர் வாங்கற சம்பளம் ரெண்டாயிரம்; நான் தொள்ளாயிரம்!... ஏதோ ஒரு 'சண்டே' வந்து வேலை செய்து 'ஓவர்டைம்' போடலாம்னு பிளான் போட்டா, விடமாட்டேங்கறான் பார்! அல்பம்! உலக மகா அல்பம்!

ஜல: உங்களுக்கென்ன சார்! மாசம் பூரா ஓவர்டைம்தானே?

குப்பு: எப்படியம்மா?

ஜல: நீங்க வாங்கற சம்பளமே ஓவர்டைம் மாதிரிதானே! எல்லாரும் தினமும் ஆறு மணி நேரம் வேலை செய்து சம்பளம் வாங்கினால், நீங்க அரை மணிதானே வேலை செய்யறீங்க!

(சொல்லிவிட்டு, டைப் செய்த காகிதங்களை எடுத்துக் கொண்டு அப்பால் போகிறாள் ஜலஜகுமாரி. குப்புசாமி பார்வையில் எலெக்ட்ரிக் பட்டாஸ் வெடிக்கிறது. ஃபைலுக்குள் ஒளித்து வைத்திருந்த பத்திரிகையைப்பழைய படி புரட்டத் தொடங்குகிறார்.)

## காட்சி 2

[ஞாயிற்றுக் கிழமை. ஆபீசில் குப்புசாமி தன்னந் தனியே உட்கார்ந்து ஃபைல்களைப் புரட்டிக் கொண்டிருக்கிறார். மானேஜர் நாராயணன் வருகிறார்.]

நாரா: என்ன குப்ஸ்! ஏகப்பட்ட வேலை செய்திருக்கிறீர் போலிருக்கே!

குப்பு: எஸ் சார்... முப்பத்தாறு ஃபைல் பார்த்து விட்டேன். இதுவரை!

நாரா: வெரி குட்! நீர் வீட்டுக்குப் போகலாம்.

குப்பு: மணி 12.30தான் ஆறது... 'மூணு மணிவரை வேலை செய்'னு நீங்கதானே சொன்னீர்கள்!

நாரா: சரி.. டிபனுக்குப் போய்விட்டு வாருங்களேன்!

குப்பு: நான் வீட்டிலிருந்தே டிபன் கொண்டு வந்துட்டேன் சார்... வெங்காய அடை, புதினா சட்னி! (ஜயண்ட் சைஸ் டிபன் பாக்ஸைக் காட்டுகிறார்.)

நாரா: அப்போ சரி... டாண்ணு மூணு மணிக்கு வீட்டுக்குக் கிளம்பிடணும்... தெரிஞ்சுதா? (போகிறார்.)

குப்பு: என்ன இது! இந்தப் பாவி மத்த நாட்களிலேதான் கழுத்தை அறுத்தான் என்றால் ஞாயிற்றுக் கிழமைகளிலேகூடவா? இவனையெல்லாம் டிம்பக்டூவுக்கு டிரான்ஸ்பர் பண்ணணும்!

## காட்சி 3

[மணி மூன்று. ஏகப்பட்ட ஃபைல்களைக் கொண்டுபோய் மானேஜர் மேஜை மீது வைக்கிறார் குப்புசாமி.]

நாரா: என்னய்யா! இதெல்லாம் பார்த்துட்டீரா?

குப்பு: பார்த்துட்டேன் சார்...இன்னும் பதினெட்டே ஃபைல் பாக்கி... அரை மணி இருந்து அதையும் முடிச்சுட்டுப் போயிடலாம்னு...

நாரா (சீறுகிறார்): என்ன, விளையாடறீரா? அஞ்சு நிமிஷம் டயம் தரேன் உமக்கு... அதுக்குள்ளே இடத்தைக் காலி பண்ணி ஆகணும்! புரிகிறதா?

குப்பு (பயந்துபோய்): சரி சார்!

(சிறிது நேரத்துக்கெல்லாம் குப்புசாமி ஆபீஸை விட்டு வெளியேறுகிறார். அந்தச் சாலையில் சற்றுத் தள்ளி இருக்கும் பெட்டிக் கடையில் போய் நின்று வாழைப் பழங்களை வாங்கி உரித்து உள்ளே தள்ளுகிறார். பழக்கமான கடைக்காரர் பேச்சுக் கொடுக்கிறார்.)

கடைக்காரர்: என்ன சார், அதிசயமா இருக்குது! ஞாயித்துக் கிழமையிலே கூடவா ஆபீஸ்?

குப்பு (பெருமையாக): ஆமாம்பா!... அந்த மானேஜர் மடையனுக்கு ஒரு மண்ணும் தெரியல்லே! 'ஹெட்டாபீஸுக்குப் பதில் எழுதணும்'னு என் காலை ரகசியமா வந்து விழுந்தான். ஒழிஞ்சு போகட்டும்னு ஒத்தாசை பண்ண வந்தேன்!

கடை: இந்த மாச 'இரை வம்பு' பத்திரிகை பார்த்தீங்களா சார்...? சிலுக்குக் கல்யாணம் கட்டிக்கிட்டுச் சிங்கப்பூர்ல போய் தங்கிடப் போறதா நியூஸ் போட்டிருக்கானே?

(கடைக்காரர் 'கிளிப்'பிலிருந்து பத்திரிகையை உருவி நீட்டுகிறார். குப்புசாமியின் முகம் ரெய்டுக்கு வந்த இன்கம் டாக்ஸ் அதிகாரிகளைக் கண்ட கறுப்புப் பண முதலையின் முகமாகக் களையிழக்கிறது. 'இருப்பா! இதோ வரேன்!' என்று சொல்லி விட்டு ஆபீசை நோக்கி ஓடுகிறார்.)

## காட்சி 4

(குப்புசாமி ஆபீசுக்குள் நுழைகிறார். மானேஜரின் அறையில் மின் விசிறி சுற்றுகிறது. கொஞ்சம் தயங்குகிறார். பிறகு விடுவிடென்று உள்ளே செல்லும்போது திடுக்கிடுகிறார். அக்கவுண்ட்ஸ் பிரிவில் இரும்புப் பெட்டி அருகில் ஓர் உருவம் ...மங்கலாகத் தெரிகிறது. நொடிப் பொழுதில் அந்த அறைக் கதவை இழுத்துச் சாத்தி, வெளிப்புறமாகத் தாழ் போடுகிறார் குப்புசாமி. பிறகு ஹாலுக்கு ஓடிவந்து 100க்கு போன் பண்ணுகிறார். மூன்றே நிமிடத்தில் போலீஸ் வேன் வருகிறது. போலீஸ் அதிகாரியிடம் தாம் கண்டதைச் சொல்கிறார் குப்புசாமி. போலீஸார் அக்கவுண்ட்ஸ் அறைக் கதவைத் திறந்ததும் – வெளியே வருகிறார் மானேஜர் நாராயணன்!

நாரா: குப்புசாமி! என்னய்யா கலாட்டா இது! ஹூம்?

குப்பு: சார்! நீங்களா? நான் யாரோ திருடன் தான் நம்ம ஆபீசுக்குள் நுழைஞ்சிட்டான்னு நினைச்சு....

நாரா: ஸில்லி!... இன்ஸ்பெக்டர்! நான்தான் இங்கே மானேஜர். இதோ இந்தக் கணக்கு வழக்குகளைப் பார்த்துக்கொண்டிருந்தேன். இவர் என்னடாவென்றால் முட்டாள்தனமாகக் கலாட்டாப் பண்ணி உங்களை வரவழைத்து விட்டார்... ஐ யாம் ஸாரி..

(இந்தச் சமயத்தில் துப்பாக்கிக் குண்டைத் தோற்கடிக்கும் வேகத்தில் உள்ளே நுழைகிறார் ஒரு டிப்டாப் ஆசாமி. நாராயணனின் கையிலிருந்து கணக்குப் புத்தகங்களைப் பறித்துக் கொள்கிறார்.)

வந்தவர்: இன்ஸ்பெக்டர்! முதலில் இந்த மானேஜரை அரெஸ்ட் பண்ணுங்கள்!

இன்ஸ்: நீங்க யார் சார்? எதற்காக இவரை அரெஸ்ட் செய்யச் சொல்கிறீர்கள்?

வந்தவர்: நான்தான் ஸார் இந்தக் கம்பெனியோட மானேஜிங் டைரக்டர். மானேஜர் நாராயணன் இருக்கிறாரே, இத்தனை நாட்களாக என்னை ஏமாற்றிப் பொய்க் கணக்கு எழுதி வந்திருக்கிறார். நான் திடுமென்று புறப்பட்டு வந்து இந்தப் பொய்க் கணக்குகளைக் கைப்பற்ற வேண்டுமென்று 'பிளான்' பண்ணியிருந்தேன். அது எப்படியோ நாராயணனுக்குத் தெரிந்துவிட்டது போலிருக்கிறது. நான் வருவதற்குள் இந்தக் கணக்குப் புத்தகங்களை அப்புறப்படுத்தி விட முயன்றிருக்கிறார். ப்ளீஸ் அரெஸ்ட் ஹிம்!...

குப்பு: எம். டி. சார்! இப்போது புரிகிறது சார் விஷயம்! ரெண்டு வாரமாக என்னை ஞாயிற்றுக் கிழமை வரக் கூடாதுன்னு சொல்லிட்டு, நம்ம மானேஜர் சில அக்கவுண்ட் புக்குகளை அப்புறப்படுத்தியிருக்கிறார்.... இன்றைக்கு நான் இங்கே வந்து வேலை செய்யக் கூடாதென்று நேற்றே முட்டுக்கட்டை போட்டார்... அதையும் மீறி நான் வந்து விட்டேன்... என்னை வீட்டுக்குத் துரத்துவதிலேயே குறியாக இருந்தார் சார்...

(நாராயணனின் முகம் 'பிளாக்'கில் வாங்கிய சினிமா டிக்கெட் போலி என்றறிந்த சினிமா ரசிகரின் முகம் போலத் தொய்கிறது.)

இன்ஸ்: சரி சரி... எல்லாரும் ஸ்டேஷனுக்கு வாருங்கள்! அங்கே பேசிக் கொள்ளலாம்! (தனக்குள்: 'பி.ஸி. 756 இந்நேரம் சுஜேந்திர விலாஸிலிருந்து ஆனியன் ரவாவும், மைசூர் போண்டாவும் சுடச் சுட வாங்கி வந்து வைத்திருப்பார் ஸ்டேஷனில்... அதை உள்ளே தள்ளிய பிறகுதான் இந்த ஆசாமிகளை விசாரிக்க வேண்டும்...')

## காட்சி 5

[மூன்று நாட்களுக்குப் பின். குப்புசாமி ஆபீசில் பகிரங்கமாக ஒரு மர்ம நாவலை வைத்துப் படித்துக் கொண்டிருக்கிறார். பக்கத்து சீட் ஜலஜ குமாரி பேச்சுக் கொடுக்கிறாள்.

ஜல: என்ன சார்! கடைசியிலே நீங்களும் ஹீரோவாகி விட்டீர்களே!

குப்பு: உஸ்! தொந்தரவு பண்ணாதேம்மா, வேலை செய்யும்போது!

ஜல: ஊழல் பெருச்சாளி நாராயணனைக் கணக்குப் புத்தகமும் கையுமாகப் பிடித்துக் கொடுத்தீர்கள் என்று கை நிறையப் பணம், பிரமோஷன், பாராட்டு! கொடுத்து வைத்தவர் சார் நீங்கள்!

குப்பு: ஹூம்! நான் மட்டும் அன்றைக்குச் சரியான நேரத்துக்கு இங்கு வரவில்லையென்றால், பெருச்சாளி தப்பியிருக்கும்... தெரியுமா?

ஜல: அது சரி, நீங்கள் ஏன் சார் அந்த ஞாயிற்றுக் கிழமை திரும்பி ஆபீஸுக்கு வந்தீர்கள்?.. மானேஜர் தில்லு முல்லு செய்வார்னு ஜோஸ்யம் கிஸ்யம் தெரியுமா உங்களுக்கு!

குப்பு: ஒரு புடலங்காயும் தெரியாது! அன்றைக்கு வழக்கம் போல் ஃபைலுக்கு நடுவில் 'சிலுக்கு பிலுக்கு சிங்காரச்செட்டு'ங்கிற நாவலைப் படித்துக் கொண்டிருந்தேன். கவனப் பிசகா ஃபைலோடு நாவலையும் வச்சு மானேஜர் மேஜையிலே கொண்டு போய் வெச்சுட்டேன்... கடைக்காரன் 'சிலுக்கு' என்றதும்தான் ஞாபகம் வந்தது.... அந்த நாவலை எப்படியாவது எடுத்து வந்து விடலாம் என்று வந்தேன். நாராயணன் மாட்டிண்டான்! (சிரிக்கிறார்)



ஒட்டகத்தின் பால் பசும்பாலைக் காட்டிலும் சத்துள்ளது. பசும்பாலைக் காட்டிலும் சுவையுள்ளது.

இதற்காக சோவியத் யூனியனில் பெரிய பெரிய ஒட்டகப் பண்ணைகளைப் பல இடங்களில் நிறுவியிருக்கிறார்கள்.

ஒவ்வொரு பண்ணையிலும் 5000க்கும் மேற்பட்ட ஒட்டகங்கள் இருக்கின்றன.

ஒட்டகப் பாலிலிருந்து 'ஷீபாத்' என்ற ஒருவித பானம் தயாரிக்கப்படுகிறது. இந்தப் பானம் தாகத்தைத் தணித்து, இதமளிக்கிறது.

—ஏ. நிர்ச்சலா தேவி

# நலம் தரும் நள்ளாறு

## தெய்வ தரிசனம்

தமிழ்நாட்டில் க்ஷேத்திராடனம் செய்யக் கோடைக் காலமே சிறந்தது. வெய்யிலைப் பொறுத்துக் கொண்டால் மல்லிகையின் மணத்தை அனுபவிக்கலாம். எல்லாக் கோவில்களிலும் மல்லிகையின் மணம் மனத்தையே நிரப்பிவிடும். தெய்வ வடிவங்கள்தான் மல்லிகை மாலைகளைச் சூடி நம்மை மகிழ்விக்கின்றன என்றால் தரிசனத்துக்கு வரும் பெண்மணிகளும் மல்லிகை ,மலர் சூடிக் கொண்டு மகிழ்ச்சியோடு காணப்படுகிறார்கள். அர்ச்சனை செய்துவிட்டு நமக்குக் கொடுக்கின்ற பிரசாதத்திலும் மல்லிகைச் சரம். ''நாடகமாடு நள்ளாறுடையநம் பெருமான்'' என்று சம்பந்தர் பாடிய பெருமான் சூடியமலர்.

காவேரி நதியின் கிளை நதிகளான அரிசிலாறு, நூலாறு இரண்டுக்கும் நடுவில் இருப்பதால் இந்தத் தலம் நள்ளாறு என்று பெயர் பெற்றது. வளம் கொழிக்கும் பூமி.

கலிங்கநாட்டரசன் பார்க்கவ முனிவருக்கு அபசாரம் செய்து விட்டான். தபோதனர்களை இகழ்ந்ததால் சாபம் பெற்ற எத்தனையோ பேரைப் பற்றிப் புராணங்கள் கூறுகின்றன. இந்த அரசனும் பட்டத்தரசி, இளவரசன் இருவருடனும் யானையாகித் திரிந்தான். அவனிடம் இரக்கம் கொண்டார் நாரதமுனிவர். ''தர்ப்பைப் புல் சூழ்ந்த காட்டில் பிரம்ம தேவர் அமைத்த தீர்த்தம் இருக்கிறது. அதில் மூழ்கிய சிவனடியார் மேலேயிருந்து உங்கள் மீது சில திவலைகள் சிதறுமானால் நீங்கள் சாப விமோசனம் பெறுவீர்கள்'' என்று கூறினார். உடனேயே மூவரும் தர்ப்பாரண்யம் என்ற அந்தத் தலத்தைத் தேடிச் சென்றார்கள். மெய்யடியாரின் மெய்யிலிருந்து தெறித்த நீரினால் சாப விமோசனம் பெற்று, சுயம்பு மூர்த்தியான தர்ப்பாரண்யேசுவரரை வணங்கிப் பெரும் பேறு பெற்றார்கள்.



✕ போகமார்த்தபூண் முலையம்மை

தேவர்களும் விரும்பிக் காதலித்த அழகி தமயந்தி. அவள் நள மகாராஜனை வரித்ததால் பொறாமை கொண்டார் சனீச்வர பகவான். நளனைப் பிடித்துக் கொண்டு ஆட்டிப் படைத்தார். பட்ட கஷ்டங்கள் எல்லாம் தீர்ந்து நாட்டைத் திரும்ப அடைந்து சௌக்கியமாக வாழ்ந்த போதிலும் நளனுக்கு மனத்தில் அமைதி உண்டாகவில்லை; வேதனை குறையவில்லை. நளனுடைய நெஞ்சை அழுத்தும் சுமை குறைய நாரத முனிவர் அவர்களைத் தீர்த்த யாத்திரை செய்து வரச் சொன்னார். பல நதிகளில் மூழ்கிப் பற்பல தலங்களில் வழிபாடுகள் செய்த பின்னும் மனம் தெளிவுறாமல் நளன் குழம்பியபோது, பாரத்வாஜ முனிவர் எதிர்ப்பட்டார்.

''நள மகாராஜனே! தர்ப்பாரண்ய க்ஷேத்திரத்தில் சென்று பிரும்ம தீர்த்தத்தில் மூழ்கி சிவ தரிசனம் செய்தால் உன்னைப் பிடித்த சனி பகவான் விலகி விடுவார். நீயும் அமைதி பெறுவாய்'' என்று கூறினார். நளனும் அப்படியே செய்து, கோவிலுக்குள் நுழைந்தபோது கோபுர வாசலில் சனி பகவான் விலகி நின்று கொண்டார். நளன் புதிய தேஜஸை அடைந்து மகிழ்ந்தான். சனீச்வர பகவான் அங்கேயே நின்று கொண்டு திருநள்ளாற்று நாயகனை வழிபட வரும் அடியார்கள் அனைவரையும் வாழ்விக்கும் தெய்வமாகவே விளங்கி வருகிறார்.

காரைக்காலிலிருந்து ஐந்து கிலோ மீட்டர் தூரத்தில் அமைந்துள்ள திருநள்ளாற்றுத் தல புராணத்தில் இன்னும் சில கதைகளும் காணப்படுகின்றன. புராணத்திலிருந்து வரலாற்றுக்கு வருவோம்.

✕ நகவிடங்கர்





✠ சனீச்வரர்

நின்ற சீர் நெடுமாறன் என்ற பாண்டிய மன்னன் சைவ சமயத்தைப் புறக்கணித்து சமணர்களை ஆதரித்து வந்தான். பழையாறை நகரில் பிறந்து சிவ பக்தியையே தன் பிறந்த கத்துச் சீராகக் கொண்டு வந்தவர் பாண்டி மாதேவியான மங்கையர்க்கரசியார். நெடுமாறன் சிவநெறியில் நிற்கவேண்டும் என்று மந்திரியான குலச்சிறையாரும் விரும்பினார். அருள் குழந்தையான ஞானசம்பந்தப் பெருமான் மதுரைக்கு வந்தால் சைவம் தழைக்கும் என்று இருவரும் எண்ணினார்கள். குலச்சிறையார் சம்பந்தர் பெருமானைத் தேடிச் சென்று அரசியார் அழைப்பதைத் தெரிவித்தார். அப்போது உடனிருந்த அப்பர் பெருமான் சமணர்கள் ஆதிக்கம் ஓங்கியிருந்த மதுரையில் சம்பந்தருக்கு ஆபத்து வரலாம் என்று பயந்தார். ''நாளும் கோளும் சரியாக இல்லை. சமணர்களுடன் வாதம் செய்யப் போக வேண்டாம்'' என்று தடுத்தார்.

அம்பிகையையே அன்னையாக அடைந்தவர் சம்பந்தர். அவரை நாளும் கோளும் என்ன செய்யும்? ஓர் அற்புதமான பாடலைப் பாடி விட்டுப் புறப்பட்டு விட்டார்.

''மூங்கிலைப் போன்ற வனப்பான தோளை உடைய உமையைத் தன் பாகத்தில் உடையவனை எம்பெருமான் வீணையும் கையுமாய் என் உள்ளத்தில் புகுந்து கொண்டபடியால்,

''ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன்
வியாழன் வெள்ளி சனி பாம்பிரண்டுமுடனே
ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே!''

சமணர்கள் சம்பந்தரை அனல் வாதம், புனல் வாதத்துக்கு அழைத்தார்கள். வாக்கு வாதம் பிரச்சினையைத் தீர்க்காது என்று தெரிந்து கொண்டு விட்டார்கள். தீயை மூட்டினார்கள். சமணர்கள் தங்கள் சமய மந்திரம் எழுதிய ஏட்டையும், சம்பந்தர் சைவ மந்திரம் எழுதிய ஏட்டையும் நெருப்பில் இடுவது; எந்த ஏடு எரியாமல் இருக்கிறதோ அவர்கள் வென்றதாக ஒப்புக் கொள்ளவேண்டும்.

சம்பந்தர் பெருமான் தன்னுடைய சுவடிக் கட்டைப் பிரித்தார். தம் பசிக்கு இரங்கிப் பாலூட்டிய அம்பிகையை அவர் நினைத்துக் கொண்டே ஓலை நறுக்கை உருவியிருக்க வேண்டும். அவர் திருநள்ளாறு சென்றபோது பாடிய ''போகமார்த்த பூண் முலையாள்'' என்ற பதிகம் கையில் வந்தது. அதை எரியும் தணலில் இட்டார். சமணர்களும் தங்கள் ஏட்டைப் போட்டனர். அது எரிந்துவிட்டது. சம்பந்தர் இட்ட ஏடு எரியவில்லை. புத்தம் புதியதாக அது விளங்கியபடியால் ''பச்சைப் பதிகம்'' என்று பெயர் பெற்றது.

இப்படி நள்ளாற்றில் பாடியபதிகம் மதுரையில் சமணர்களை வென்றது.

திருநள்ளாற்றுக்கு இன்னுமொரு சிறப்பு இது விடங்க ஸ்தலங்கள் ஏழில் ஒன்று. முசுகுந்த சக்கரவர்த்தி பெற்று வந்த செதுக்கப்படாத மரகதலிங்கங்களில் ஒன்று இங்கே இருக்கிறது. தியாகராஜ சுவாமியும் உமா தேவியாருடனும் கந்த பெருமானுடனும் எழுந்தருளியிருக்கிறார். உத்ஸவ காலங்களில் 'உன்மத்த' நடனம் மிகவும் விசேஷமாம்.

கோவிலைச் சுற்றி ஒரு காலத்தில் அகழி இருந்ததாகக் கூறப்படுகிறது. ராஜ கோபுரத்தைத் தாண்டியதும் கற்பக விநாயகரைத் தரிசிக்கிறோம். மூன்றும் பிராகாரத்தை வலம் வரும்போது நகவிடங்கப் பெருமானை சதா தரிசித்துக் கொண்டிருக்கும் சுந்தரரைக் காண்கிறோம். கலி நீங்கிய நளச் சக்கரவர்த்தி அறுபத்து மூவருடன் அறுபத்து நாலாவது அடியாராகக் காணப்படுகிறார்.

துவார பாலகர்கள் காலைத் தூக்கிக் கதையில் வைத்துக் கொண்டு தர்ஜனி ஹஸ்தத்தால் மிரட்டுகிறார்கள்.

சம்பந்தர் பரவிய ''வளங்கெழுவு தீபமொடு தூப மலர் தூவி நளன் கெழுவி நாளும் வழிபாடு செய்...'' நள்ளாற்றானைப் போற்றி வணங்குகிறோம். நாவுக்கரசர் பெருமான், ''கயிலை மேய நல்லானை, நம்பியை, நள்ளாற்றானை நான் அடியேன் நினைக்கப்பெற்றுய்ந்தவாறே'' என்று மனமுருகிப்



✠ தங்கக்காக வாகனம்

பாடிய நம்பியைத் தரிசனம் செய்து கொள்கிறோம். தரிசனம் கிடைத்து விட்டது. நாமும் உய்ந்து விடுவோம். அர்ச்சகர் அளிக்கும் திருநீற்றை ''மந்திரமாவது நீறு'' என்று எண்ணிக் கொண்டே நெற்றியில் இட்டுக் கொண்டு பிரதட்சிணம் செய்து விட்டு சனி பகவான் சன்னிதி சென்றால் அங்கு பெரும் கூட்டம்.

...நள்ளாற்றுக் கனக வச்ரத்
திருவாசலிடம் நின்ற மந்தன்
இரு செந்தளிர்த்தாள் சிந்தை செய்வாம்.

சனீச்வர பகவானுக்கு மந்தன் என்று ஒரு பெயர். ராசி மண்டலங்களைச் சுற்றி வருவதற்கு சனி கிரகத்துக்கு 30 வருடங்கள் ஆகின்றது. இவ்வளவு மெள்ள இவர் சஞ்சரிப்பதாலேயே மந்தன் என்றும் மெதுவாக நகர்பவர் என்ற பொருள் தரும் சனைச்ரன் என்றும் பெயர் வந்தது. சூரிய புத்திரர். வலிமை மிகுந்தவர். ஒவ்வொருவருடைய வாழ்நாளிலும் முப்பது வருடத்துக்கு ஒரு முறை சனி பகவானின் தசை வந்தே தீரும்.

சிவனடியார்களுக்குப் பொங்கு சனியாகவே இருந்து வாழ்விப்பார். சனீச்வர பகவானைத் திருப்தி செய்யத் திருநள்ளாற்றில் அவருடைய வாகனமான காகத்தைப் பொன்னால் செய்து வைத்திருக்கிறார்கள். கரிய நிறமுள்ள ஒரு சாதாரணக் காக்கைகூட சனி பகவானைத் தாங்குவதால் தங்கமாகவே ஜொலிக்கிறது. சனி பகவானின் அருளுக்குப் பாத்திரமாகி விட்டால் நமக்குக் கூட எல்லாச் செல்வங்களும் அருளுவார்.

பிரார்த்தனை செய்து நிற்கும்போது, ஹோமப் புகையின் மணம், மல்லிகையின் மணம், தூபத்தின் மணம், எண்ணெய் விளக்கின் மணம் இவற்றை அனுபவிக்கிறோம். பட்டினத்து மணங்களை நுகர்ந்த நமது நாசிக்கு இந்த அனுபவம் ஆனந்தத்தைத் தருகிறது.

எதிரில் உள்ள பிராணாம்பிகையின் சந்நிதியில் மனம் லயிக்கிறது. சைவ சமயம் ஓங்க ஓலை நறுக்கு எரியாமல் ஈரம் கசிந்து பசுமையாக இருக்கும்படி அருள் சுரந்த தேவி. ''இவளோடு கூடியிருப்பதாலேயே சிவன் நாமம் எழுதிய ஓலை எரியிலிட்டாலும் பழுதடையாது. இது சத்தியம்'' என்று பத்துத் தடவைகள் திரும்பத் திரும்பக் கூறுகிறார் சம்பந்தர் பெருமான். உமையவளின் புதல்வியல்லவா? ஞானம் தராமல் இருப்பாளா? சம்பந்தருடைய நள்ளாற்றுப் பதிகங்கள் மெய் சிலிர்க்க வைக்கின்றன. இந்தப் பாடல்கள் தமிழ் நாட்டில் ஒரு விழிப்புணர்ச்சி யூட்டியதில் வியப்பே இல்லை. அது ஒரு பொற்காலந்தான். சைவ நெறி தழைத்தது மட்டுமா? கலைகளில் மறுமலர்ச்சியையும் உண்டாக்கியவரல்லவா ஞானசம்பந்தர்!

முக மண்டபத்தில் இடதுபுறத்தில் அம்பிகையின் உற்சவ மூர்த்தம் இருக்கிறது. நான்கு திருக் கரங்கள். அபய ஹஸ்தம். இடது கை சற்றுத் தாழ்ந்து ஊரு ஹஸ்தமாக விளங்குகிறது. மெல்லிய தோள்களுக்கு அருகே இரு கரங்களிலும் தாமரை மலர்கள். ஒன்று விரிந்து மலர்ந்திருக்கிறது. இன்னொன்று இதழ் விரியத் தொடங்கிய மொட்டு. நம் மனக் குறைகளைக் கேட்டு அருள் புரியும் திருச் செவிகளின் மேல் மடலிலும் இரு சிறிய தாமரைகள் செவிப் பூவாக அணி செய்கின்றன. சிலம்பும் நூபுரமும் அணிந்த பாதங்களில் சிரம் வைத்து வணங்குகிறோம். சாந்தம் குடி கொண்ட எழில் வதனம். விழா உலா நாட்களில் அலங்கரித்துப் பார்ப்பது ஒருவித அழகு என்றால் வடிவத்தின் அழகைப் பூரணமாகக் கண்டு மகிழும்படி குறைவான அலங்காரத்துடன் விளங்குவது இன்னொரு அழகு. அலங்காரக் கொண்டையுடன் அம்மன் காட்சி தருகிறாள்.

மூலஸ்தானத்தில் உள்ள தேவியோ தாடங்கமும் உயர்ந்த கிரீடமும் அணிந்து காட்சி தருகிறாள். இறைவியைத் துதித்து, ''உன் அருள் மழையிலே நாட்டில் நீர் மழை பொழிந்து செழிக்கச் செய்வாய்'' என்று பிரார்த்தனை செய்து கொண்டு வெளியே வந்து துவஜஸ்தம்பத்தினருகில் நமஸ்கரித்து நிமிர்கிறோம்.

நந்தி பகவானிடம் விடைபெற்றுக் கொள்ளும்போதுதான் சிவபெருமான் புன்னகை புரிந்து நம் வழிபாட்டை ஏற்றுக் கொள்கிறாராம்.

திருநள்ளாற்றில் வழிபடுவோர் விடுதியும் கல்யாணமண்டபமும் கட்டிவைத்திருக்கிறார்கள். ராஜகோபுரத் திருப்பணியும் நடந்து வருகிறது.

நளதீர்த்தத்திலும் பயப்படாமல் இறங்கிப் புண்ணியம் பெறலாம். சுத்தமாக இருக்கிறது.

''தள்ளாறுத பொற்கொன்றை கமழ்சடை
'நள்ளாறு' என, நம் வினை நாசமே.''

எங்கள் ஊருக்கும் கடலூருக்கும் இடையே ஓடும் ஒரு டவுன் பஸ்ஸில் ''பயணிகள் முன்னே நகர்ந்து செல்லவும்; டிக்கெட்டைக் கேட்டுவாங்குங்கள்; பெண்களுக்கு எழுந்து இடம் கொடுங்கள்'' போன்ற கண்டக்டர் அதிகமாகப் பயன்படுத்தும் வார்த்தைகளைக் 'கேஸெட்டில்' பதிவு செய்து அவ்வப்போது பஸ்ஸில் உள்ள டேப் ரிக்கார்டரில் போட்டு விடுகிறார்கள்!

—ரா. ஜோதிராமன்







# துணிகளை வெளுப்பதிலேயே நான் நிலைகுலைந்து போனேன்....

# ...கோபுரம் சோப்பு தெரியும் வரை



துணிகளை வெளுப்பது எப்போதுமே ஒரு கடின வேலை. சாதாரண சலவை சோப்புகளிலுள்ள காரம் மிகுந்த அழுக்கு நாசினிகள் என் கைகளைப் புண்ணாக்கி அவை நாள் முழுவதும் எரிந்து கொண்டிருக்கும். இனி அப்படியில்லை.

கோபுரம் சோப்பு அழுக்கை அறவே நீக்குவது மட்டுமல்ல தேர்ந்தெடுத்த சிறந்த மூலப் பொருட்களைக்கொண்டு தயாரிக்கப்படுகிறது. எனவே ஆடைகளை (வெண்மை, வண்ண) காரமான அழுக்கு நாசினிகள் இல்லாமலே துல்லியமாக வெளுக்க வல்லது.

கிடைக்குமிடம் **காதிகிராஃப்ட்**

**கோபுரம் சலவை சோப்**
ஒவ்வொரு இல்லத்தரசிக்கும் தேவைப்படுவது



தமிழ்நாடு கதர் கிராமத் தொழில் வாரியம்
குறளகம், சென்னை 600 108

ARIES DIPR 50983 TAM

# பத்திரிகைச் சட்டம் வாபஸ் — எம்.ஜி.ஆர் பலவீனமா?

○ அ. கல்குல் ஜமால், திருமங்கலக்குடி
? வந்தலக்குண்டு பள்ளி ஆசிரியர் தம் பணம் காணவில்லை என்பதற்காகப் பள்ளிக் குழந்தை கையைக் கொதிக்கும் எண்ணெயில் கைவிடச் சொன்னது பற்றி என்ன நினைப்பது?
! எண்ணெயில் மூழ்கிய ஒவ்வொரு விரலுக்கும் ஓராண்டு கடுங்காவல் தண்டனை அந்த ஆசிரியருக்கு விதிக்கலாம் என்ற அளவுக்குக் கோபம் வருகிறது. ஆனால் சட்டம் அவ்வளவு கடுமையாக இராது. புராணங்களில் சில அரக்கர்களைப் பற்றிப் படிக்கும்போது 'சே! இப்படியும் இருப்பார்களா' என்று எண்ணுகிறோம். வாழ்க்கையில் கண்ணுக்கு மெய்யாகக் காணும்போது கற்பனை கலந்திருந்தாலும் புராணங்கள் பொய்யல்ல என்று புரிகிறது.

○ ஆர். நாகராஜன், பரசலூர்
? மேனகா சென்னை விஜயம் பற்றி ஏதாவது கூறக் கூடாதா?
! வந்தார்; பார்த்தார்; ஏமாந்து திரும்பினார்.

○ கோ. பாஸ்கர், இளங்கார்குடி
? புதுவை நாடகத்தில் மனத்தைத் தொடும் காட்சி என்று நீங்கள் வர்ணித்த லட்சுமணன் ராஜினாமா வாபஸ் பெறப்படப் போவதாக வதந்தி எழுந்துள்ளதே?
! காமெடி டிராக்.

○ பூமா வாசுதேவன், ஸ்ரீரங்கம்
? பத்திரிகைகள் வளர்ச்சி அடைவது எழுத்தாளர்களாலா, வாசகர்களாலா?
! இரண்டு கையும் சேர்ந்து தட்டினால்தான் ஓசை எழும்.

○ மதுஜெயபால், அத்திமலைப்பட்டு
? நீங்கள் எந்த நேரத்தில் உணவை ரசித்துச் சாப்பிடுகிறீர்கள்?
! டாக்டர் எந்த நேரத்தில் குறைவாகச் சாப்பிடுமாறு ஆலோசனை கூறுகிறாரோ அந்த வேளையில் — இரவு.

○ நேசன், சென்னை-61
? சங்கராச்சாரியாரின் சென்னை விஜயம், பங்காரு அடிகள் விஜயம், குன்னக்குடி வயலின் இசை, இந்துக்கள் பஜனை, முஸ்லிம்கள் தொழுகை, கிறிஸ்துவர்களின் பிரார்த்தனை இத்தனைக்கும் முடியாமல் கடைசியில் மழையை வரவழைக்க விஞ்ஞானிகளின் உதவியைத்தானே நாடவேண்டியிருக்கிறது? கவனித்தீரா?
! அந்தச் செயற்கை மழை விஞ்ஞானிகளும் கடவுள் அனுக்கிரகம் வேண்டும் என்றும் மழை தாங்கிய மேகங்கள் இருந்தால்தான் தாங்கள் வெற்றி பெற முடியும் என்றும் அறிக்கை விட்டுக் கொண்டிருக்கிறார்களே அதைப் பார்த்தீரா?

○ சுமாலி, மேலப்பாலையூர்
? நெல்லுக்கு மத்திய அரசு விலை ஏற்றியுள்ளதே, போதுமா?
! கோதுமைக்குச் சமமான விலை தரும்போது போதும்.

○ லட்சுமி சிவம், சென்னை-7
? ப்ளே பாய் ஜோக்ஸ் என்று ஏன் பெயர் வந்தது? ப்ளே கேர்ல் ஜோக் என்று இல்லையா?
! ப்ளே கேர்ல் இல்லாத ப்ளே பாய் ஜோக் ஏது?

○ கு. கணேசன், சென்னை-15
? எம். ஜி. ஆரின் பத்திரிகைக் கட்டுப்பாடு சட்டம் வாபஸ் அவரது பலவீனத்தைத்தானே காட்டுகிறது?
! இல்லை, பலத்தையே உணர்த்துகிறது. பலவீனர்களுக்குத்தான் அடக்குமுறைச் சட்டங்களின் உதவி தேவை.

○ கரந்தை து. சுவாமிநாதன், தஞ்சை-2
? செயற்கை மழையை வரவழைக்க தமிழக அரசு 25 லட்சம் ஒதுக்கியுள்ளதே, பலன் தருமா?
! இந்த லாட்டரிச் சீட்டின்விலை 25 லட்சம்.

○ லட்சுமி செங்குட்டுவன், வேலூர் (சேலம்)
? துக்ளக்கை ஆதரித்து ஒரு கருத்தும் இதயத்தை ஆதரித்து ஒரு கருத்தும் தம் பெயர் அச்சில் ஏற வேண்டும் என்பதற்காக ஒரு வாசகர் எழுதியது நியாயமா?
! தம் பெயர் அச்சில் வரவேண்டும் என்ற ஒரே நோக்கில் எழுதினால் தவறுதான். ஆனால் சோ, மணியன் விவாதத்தில் இருதரப்பிலுமே ஏற்க வேண்டிய, மறுக்க வேண்டிய கருத்துக்கள் இருப்பதை என்னால் உணர முடிகிறது. இதுபோல் இன்னொருவருக்கும் தோன்றியிருக்கலாம் அல்லவா?

○ வி. சந்திரசேகர், விராலிமலை
? வரும் தேர்தலில் எம். ஜி. ஆர். இந்திராவுடன் கூட்டணி அமைத்தால் அதனால் கிருஷ்ணா நதி நீர் சென்னைக்கு லேது என்று என்.டி.ஆர். கூறிவிட்டால்....?
! ஊரைக் கூட்டிக் கொட்டிமுழக்கிய பின் 'லேது' என்று கூறுவது சுலபமல்ல. தாமதப்படுத்தலாம். ஆனால் என். டி. ஆர். அத்தகைய சின்ன புத்தி உள்ளவராக எனக்குத் தோன்றவில்லை. நிறையத் தாமதம் பணத் தட்டுப்பாடு காரணமாக ஏற்படலாம்.

○ பாரதிரங்கன், கும்பகோணம்
ஒரு ரூபாய் கொடுத்து லாட்டரிச்சீட்டில் ஏமாந்து போகும் சிலர் வார இதழ்கள் வாங்கத் தயங்குவதேன்?

! லாட்டரிச் சீட்டிலாவது பரிசு விழ வாய்ப்பிருக்கிறது; சில வாரப் பத்திரிகைகளைப் படித்தால் இருக்கிற நல்லொழுக்கமும் நற்புத்தியும் கூடப் போய்விடும் என்று ஒரு நேயர் எழுதிய கடிதம் நினைவுக்கு வருகிறது. ஆனால் சில தனி மனிதர்கள் செய்யும் தவறுகளைத் திருத்த வேண்டிய நிலையில் உள்ள அரசு தானே பகிரங்கமாக தவறு இழைப்பது பரிதாபம்.

O என். பாலு, திருச்சி-18 ★

? முன்பு தி.மு.க.. மீது ஊழல் புகார் கொடுத்து பாண்டிச்சேரி அமைச்சரவையை டிஸ்மிஸ் செய்யக் கோரிய ஜனதா, பிறகு இதே தி. மு. க.வை ஆதரிக்க முன்வந்தது ஜனதாவுக்குப் பெருமை தானா?

! ஜனாதிபதி ஆட்சியைத் தவிர்த்து ஜனநாயக அரசு தொடர உதவுவதே நோக்கம் என்ற வாதம் ஒன்று. ஜனதா ஆதரவுடன் மட்டுமே நீடிக்கக் கூடிய ஆட்சி அந்த ஆதரவு எந்த நேரமும் வாபஸ் பெறப்படலாம் என்ற அச்சம் காரணமாகவே ஊழலற்றதாக இருக்கும் என்ற வாதம் இரண்டு. சற்றுப் பலவீனமான வாதங்கள்தாம். ஆனால் இந்த வாதங்களின் பலவீனம் காரணமாகக் கவர்னர் செய்த காரியம் பலம் பெற்றதாகி விடாது.

O ஆர். நடராஜன், கும்பகோணம்

? தபாலில் அனுப்பும் அளவுக்குத் தங்கத்தின் மதிப்புக் குறைந்துவிட்டதா?

! தபாலில் ஒரு ரூபாய் பத்திரிகை முதல் ஒரு லட்சம் ரூபாய் தங்கம் வரை திருட்டுப் போகும் அளவுக்குத் தபால் துறையின் மதிப்பு குறைந்து விட்டது.

O அன்னு அன்பழகன், அந்தணப்பேட்டை

? கு. க. ஆபரேஷன் கணவன் செய்துகொள்வது நல்லதா, மனைவி செய்து கொள்வது நல்லதா?

! சந்தேகமே வேண்டாம். கு. க.வை மேற்கொள்ள வேண்டியது கணவனே. ஆபரேஷனாகட்டும், கருத்தடை சாதனங்களாகட்டும், களிம்பு மாத்திரைகளாகட்டும் அபார்ஷனாகட்டும் அனைத்திலும் பெண் இனத்துக்கு ஆபத்துக்கள் மிகுதி.

O ஜி. நடராஜன், பம்பாய்

? டாக்டர் மகாதேவனின் ''ஸேஜ் ஆஃப் காஞ்சி'' புத்தகத்தைப் பழைய பேப்பர் கடையில் வாங்கினேன். இத்தனை அருமையான புத்தகத்தை விலைக்குப் போடுகிறார்களே?

! ஒருவேளை மலிவு விலையில் வேறு யாரேனும் படித்துப் பயன் அடையட்டும் என்ற உயர் நோக்கம் காரணமாயிருக்கலாம்!


வீரராகவன்


சிவராமன்


டி. வி. சங்கரநாராயணன்

O எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி

? குஜராத் வெள்ள நிவாரண நிதி அனுப்புவதற்கு முகவரி வேண்டாமா? கொடுத்தால் என்ன குறைந்தா போய்விடுவீர்?

! பிரதமரின் விலாசத்தை நான் தந்துதான் நீங்கள் தெரிந்து கொள்ளவேண்டுமென்றால் நீங்கள் மட்டுமின்றிப் பிரதமரும் கூட அல்லவா குறைந்து போய்விடுவார்!

O மா. மோகன், கோவை

? இந்திப் படங்களில் இந்திப் பாடல்களை விரும்பிக் கேட்கும் தமிழர்கள் ஏன் இந்தி மொழி கற்க மறுக்கின்றனர்?

! இசைதான் இவர்களை அதிகம் ஈர்க்கிறதே யொழிய மொழியல்ல.

O ப. பழனி, சென்னை-43

? அலுவலகத்தில் பணியாற்றுவோர் மட்டும் ஒழுங்காக வருமான வரி கட்டி விடுகிறார்களே?

! வேறு வழி? வருமான வரி ஏய்க்க டாக்டர்கள், வழக்கறிஞர்கள், இன்ஜினியர்கள், தொழிலதிபர்கள் போன்றோருக்கு உள்ள வாய்ப்பு மாதச் சம்பளக்காரர்களுக்கு இல்லையே! மக்கள் யோக்கியர்களாக இருக்க அளவாக வரி விதிப்பதே வழி.

O ஆர். ஜெயலட்சுமி, நெப்பத்தூர்

? சமீபத்தில் ரசித்தது?

! சென்னை மியூசிக் சர்க்கிள் ஆதரவில் அண்மையில் நடந்த டி. வி. சங்கரநாராயணன் கச்சேரியின் ஒவ்வொரு வினாடியையும் ரசித்தேன். அதிலும் சாருகேசி ராகத்திலும் அடியொட்டிய தியாகையர் பாடலிலும் இத்தனை அற்புதங்களைச் சாதிக்க முடியும் என்பதை அன்றுதான் புரிந்து கொண்டு ரசித்தேன். மிருதங்கத்தில் சிவராமன் எழுப்பும் லயநாதம் இசைவடிவமே பெற்று விடுகிற அதிசயத்தை ரசித்தேன். திருப்பாற்கடலின் இனிமையை வயலினில் உணர்த்திய வீரராகவனின் ஆற்றலை ரசித்தேன். கச்சேரியைக் கேட்கப் பல இளைஞர்கள் கூடியிருந்ததை ஒரு ஆரோக்கியமான மாறுதலாகக் கருதி மன நிறைவோடு ரசித்தேன்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:

என். பாலு,

த. பெ. எண் 997

திருச்சி-18




● 12–6–83 இதழில் 'சிதம்பர ரகசியம்' என்ற கட்டுரையில் சிதம்பரத்தில் ஒரு நூற்பாலையும் விஸ்தரிக்கப்படாததற்குக் காரணம் 'நிர்வாகச் சீர்கேடு' என்று எழுதியிருப்பது உண்மைக்குப் புறம்பானது. போதிய இட வசதி இல்லாததால்தான் விஸ்தரிப்புச் செய்ய முடியாத நிலை ஏற்பட்டுள்ளதே தவிர நிர்வாகச் சீர்கேடு எந்தக் காலத்திலும் இருந்ததே இல்லை.

சிதம்பரம் என். எம். பொன்னம்பலம் பிள்ளை
தலைவர், இயக்குநர் குழு, நாஷனல் ஜுவிங் திரெட் கம்பெனி லிமிடெட்.

● நேசமணியின் தேர்தல் சின்னம் குடமா பானையா? இந்தச் சர்ச்சையை எனது இக்கடிதம் தீர்த்து வைக்கும்.

திருவாங்கூர் தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியின் சார்பில் போட்டியிடும்போதெல்லாம் திரு நேசமணிக்குக் கிடைத்து வருகின்ற சின்னம் 'குடம்'தான். ஆனால் அந்தக் குடம் சின்னம் கொடிகளிலும், சுவர்களிலும், பானர்களிலும் வரையப்பட்டிருக்கும்போது பானை தான் காணப்படும். குழந்தைகளோ, பெரியவர்களோ பேசும்போது பேச்சு வழக்கில் நேசமணியின் சின்னம் 'பானை' என்று கூறுவார்கள். ஓட்டுப் போடும் பேலட் பேப்பரிலும் பானைதான் வரையப் பட்டிருக்கும் என்பது குறிப்பிடத் தக்கது. ஆனால் அங்கீகரிக்கப்பட்ட சின்னம் குடம்தான்.

பாலப்பள்ளம் ஜே. ரத்னமணி

● உலகக் கோப்பையை நாம் பெறுவதற்குக் காரண கர்த்தாவான இளஞ் சிங்கங்கள் கபிலையும், மொஹீந்தரையும் அட்டையில் போட்டிருந்தால் என்ன குறைந்தா போய் விடுவீர்? அட்லீஸ்ட் உள் அட்டைகளிலாவது போட்டிருக்கலாமே!

குடியாத்தம் (வ.ஆ.) ஆர். அரிகோபி

(17-7-83 இதழைப் பார்த்து உங்கள் ஆசை பூர்த்தியாகி இருக்குமே! - ஆசிரியர்)

● ஐந்தாவது வல்லரசாகிய பத்திரிகை உலகைப் பற்றிய பேரறிஞர்களின் கருத்துக்களை எடுத்துக் கூறி, அத்துடன் நில்லாமல் பத்திரிகைகளின் குறை நிறைகளையும் அலசி ஆராய்ந்திருப்பது 'ஐந்தாவது வல்லரசு' தலையங்கத்தின் தனிச் சிறப்பாகும்.

லால்குடி ஆ. சந்திரசேகரன்

● 'சாண்டி'யின் செயலால் பாண்டியில் இ. காங்கிரஸ் எல்லாவற்றையும் இழந்து பிச்சாண்டியாகி ஒட்டாண்டியாகப் போகிறது என்பதைச் சொல்லாமல் இருக்கமுடியவில்லை.

சென்னை-57 இரணியல் 'கலை'

● 'நெல்லிக்குப்பம் சர்க்கரை ஆலை மூடப்படுமா?' கட்டுரை காரசாரமாக இருந்தது. இனி அரசு 'மூடுவிழா அமைச்சர்' ஒருவரை நியமி, நல்ல நிர்வாகங்களில் தலையிட்டு, தோரணங்களைக்கட்டி மூடுவிழாக்கள் செய்து நாட்டை இன்னும் குட்டிச்சுவராக்கலாம்!

சென்னை-92 கே. ராஜகோபாலன்

● 'கமலுக்குத் திருஷ்டி சுற்றிப்போடுங்கள்' என்று எம். ஜி. ஆர். கூறியதைத் தலைப்பாகத் தந்து, ஈரோட்டுப் பகுத்தறிவுப் பாதையிலிருந்து அவர் விலகி வெகு தூரம் சென்றுவிட்டார் என்பதைச் சூசகமாகக் கூறிவிட்டீர்களே!

சென்னை-61 நேசன்

● நல்லி பற்றிய ''பட்டான தகவல்''களில் கடைசிக் குறிப்பிலிருந்து அந்நிறுவனத்தின் மேல் அதன் தொழிலாளர்கள் மற்றும் வாடிக்கையாளர்கள் கொண்டுள்ள அபரிமிதமான நம்பிக்கையும் ஆதரவும் தெரிய வந்தது.

திருச்சி-14 எஸ். முரளி

● யாரங்கே? 'சீறும் சிங்கங்கள்' படத்துக்கு விமர்சனம் எழுதிய ஜெய மன்மதனைப் பாயும் புலிகள் உள்ள கூண்டில் அடைத்துப் புலிகளுடன் விளையாட விடுங்கள். அப்போது தான் டைரக்டரின் அருமை பெருமையை உணர்வார்கள் விமரிசகர்கள்!

வீரராக்கியம் வி. சந்திரசேகரன்

● என்ன அநியாயம் சார் இது! உண்மையிலேயே சிந்திக்க ஜோக் எழுதினாப் போடுறதில்லேன்னு முடிவு செய்திட்டீங்களா?

கும்பகோணம் ஜி. ராஜசேகர்

● சவிதா கன்னியமாகக் 'கல்கி'யில்தமது தொடர் கதையை எழுதினாலும், ஓவியர் ஜெயராஜ் அதற்கு விடமாட்டார் போலிருக்கிறதே! 10–7–83 இதழில் படத்தைக் கவனித்தீர்களா? இதற்கு நீங்கள் அனுமதிக்கலாமா? உங்களுக்கெல்லாம் துர்வாசர்தான் சரி!

குளச்சல் எம். முகம்மது இப்ராஹீம்

● Vowels என்று கூறப்படும் ஐந்துஎழுத்துக்களும் இடம் பெற்றுள்ள ஒரே ஆங்கிலச் சொல் Education என்பதுதான் என்பது தவறு. பல சொற்களில் Vowels அனைத்தும் இடம் பெற்றுள்ளன.

ஆதாரம்: இதற்கெல்லாம் என்ன ஆதாரம் வேண்டிக் கிடக்கு? ஆங்கில அகராதியைப் புரட்டினால் கிடைக்காத விஷயங்களா?

சென்னை-44 க. கோ. கௌதமன்

(பல வாசகர்கள் இதே போலக் கடிதம் எழுதியிருக்கிறார்கள். புளியம்பட்டி அம்பலவாணன் என்பவர் 25 சொற்களைத் தொகுத்துக் கொடுத்திருக்கிறார், அனைவருக்கும் நன்றி. - ஆ-ர்)

# கை தழுவிய இதயம்

கைக்குட்டையை யார்
எடுத்தது? — அது
கூப்பிட்டுக் காதலி
கொடுத்தது.

அதன்
பின்புறம் நூலொன்று
பிரிந்திருக்கும்.
நல்ல
பிஞ்சுமாங் காய்போன்ற
நிறமிருக்கும்.
ஒரு
மூலையில் 'வி' எனும்
குறியிருக்கும்.

அதைத்
துவைக்கின்ற போதுதான்
அடித்ததில்லை.
என்
வேர்வையைக் கூடநான்
துடைத்ததில்லை.
அதற்கு
வலிக்குமோ என்றுநான்
மடித்ததில்லை.



என்
கைகளில் அவள்அதைக்
காணவில்லை.
அவள்
கண்களில் பூந்தென்றல்
வீசவில்லை.
அட
நாலைந்து நாளாகப்
பேசவில்லை!



அது
கிடைக்கின்ற போதுதான்
நான் பிழைப்பேன்!
ஒரு
புதையலைக் கண்டவன்
போலெடுப்பேன்!
என்
ஆனந்தக் கண்ணீரைத்
தான் துடைப்பேன்!









வைரமுத்து பக்கம்

# ஈத் முபாரக்

● ஆயிரம் விளக்கு மசூதிக்கு ரம்ஸான் தினத்தன்று போய், அரசாங்கத்தலைமை காஜி குலாம் முகம்மது தகி கான் அவர்களைச் சந்தித்து ஈத் முபாரக் சொன்னபோது அவர் சொன்னார்:

''ரம்ஸான் மாதத்தின் 30 நாட்களும் விரதமிருந்து, அடுத்த மாதத்தின் முதல் நாளன்று கொண்டாடப்படுவதுதான் ஈத் பண்டிகை. ஒரு மாத காலம் புகை பிடித்தல், மது போன்ற எந்த வித தீய பழக்கங்களிலும் ஈடுபடாது, நல்லபடி இருந்ததற்கு ஆண்டவனுக்கு நன்றி தெரிவிக்கும் நாள்தான் இது. இன்றைய தினத்தின் ஸ்பெஷாலிடியே சிறப்பு நமாஸ்தான். இதில் குரானிலிருந்து வழக்கமான பிரார்த்தனைகளின்போது படிக்கப்படாத பல பகுதிகள் படிக்கப்படும். ரம்ஸான் பண்டிகையின் இன்னொரு முக்கிய அம்சம் ஏழைகளுக்கு உதவுவது. உதாரணமாக, ஒரு குடும்பத்தில் ஒருவர் ஒரு மாதத்தில் ஒரு கிலோ அரிசி சாப்பிடுவாரானால், அதைப் போன்ற மூன்று மடங்கைக், கணக்கிட்டுக் குடும்பத்தில் உள்ளோர் மொத்த எண்ணிக்கையைப் பார்த்து, அதற்குரிய பணத்தை எளியவர்களுக்குத்தானம் செய்யவேண்டும்.''

''விஞ்ஞானம் இன்று எவ்வளவோ முன்னேறிவிட்டது. ஆனாலும் ரம்ஸான் தினத்தை முன்பே தெரிந்து கொள்ளமுடியாதது ஏன்?''

முஸ்லிம்களின் மாதம் சந்திரனை அடிப்படையாகக் கொண்டது. அமாவாசைக்குப் பின் முதன் முதலில் பிறை தெரியும் நாளே மாதத்தின் முதல் நாள். இப்படி சந்திரன் தெரிவதில் சில கஷ்டங்கள் உண்டு. அதனால் தான் பிரச்சினை.''

நமாஸுக்கு வந்த குடும்பத் தலைவர் டாக்டர் மிர்ஸா சொல்கிறார்:

''ரம்ஸான் தினத்தன்று வழக்கப்படியே விடியற்காலைப் பிரார்த்தனையை முடிக்க வேண்டும். மேலும் ஐந்து வேளை பிரார்த்தனையில் எந்த மாறுதலும் இல்லை. அதிகப்படியாக ஒரு நமாஸ். இது அரை மணியிலிருந்து ஒரு மணி நேரம் வரை ஆகும். இதில் எல்லா முஸ்லிம்களும் கலந்து கொள்ள வேண்டியது மிக அவசியம். நண்பர்களை ரம்ஸான் தினத்தன்று பார்த்ததும் கை கொடுத்து, ஆரத்தழுவி ஈத் முபாரக் என்று வாழ்த்திக்கொள்வோம். (ஈத் முபாரக் என்றால் மகிழ்ச்சியான ரம்ஸான் தின வாழ்த்துக்கள் என்றுபொருள்) ஏழைகளுக்கு உதவுவோம்.''

குடும்பத் தலைவி மஹரீர் மிர்ஸா சொல்கிறார்:



● ஆயிரம் விளக்கு மசூதி

''பெண்கள் மசூதிக்குப்போக மாட்டோம்; வீட்டிலேயே தொழுகை நடத்தி விடுவோம். ரம்ஸான் தினத்தன்று உறவினர்வீடுகளுக்குப் போவோம். பெரியவர்களைச் சந்தித்து ஆசி பெறுவோம். குழந்தைகளுக்கு ரம்ஸான் மிகவும் கொண்டாட்டமான நாள். அனைவரும் புதுத் துணி உடுத்துவோம். ரம்ஸானின் மற்றொரு முக்கிய அம்சம் ஸ்வீட்களும் விருந்தும். பலவிதமான ஸ்வீட்கள் செய்வோம். எல்லாவற்றுக்கும் சேமியா உபயோகிப்போம். மற்றபடி எல்லார் வீட்டிலும் பிரியாணி தவறாமல் இடம் பெறும். மாலையில் கடைத் தெரு, சினிமா எல்லாம் போவதுண்டு.''

-ஜமீலி



## அட்டையில்...

லட்சோப லட்சம் ரசிகர்களின் ஹீரோவாக விளங்கும் நடிகர் கமலஹாசன், 'கல்கி' வாசகர்களின் கேள்விகளுக்குப் பதில் தருவதற்கு அன்புடன் இசைந்திருக்கிறார்.

கமலின் பதில்களே வாசகர்களுக்கு ஒரு பரிசு போலத்தான். ஆனால் இன்னொரு பரிசும் உங்களுக்காகக் காத்திருக்கிறது. சிறந்தவை என 15 கேள்விகளைக் கமல் தேர்ந்தெடுப்பார். அவற்றை எழுதியனுப்பியவர்களுக்குத் தலா ரூ. 20 பரிசு அளிக்கப்படும்.

கேள்விகளை அனுப்பி வைக்க வேண்டிய **கடைசித் தேதி: 8-8-83.**

வண்ணப்படம்: ஏ.வி. பாஸ்கர்



மணி: சங்கரா, என்ன நம்ம ஆபீஸ் ஆளுங்க எல்லாம் டைப்பிஸ்டைச் சுத்தி நின்னுக்கிட்டு இருக்காங்க?
சங்கரன்: அதுவா? நம்ம டைப்பிஸ்ட், டைப் மிஷி னுக்கு 'ஜிலுக்கு' ரிப்பன் போட்டிருக்காராம்!

—மிஸ்ரா



அவர்: எங்க வீட்டில் இருந்த டூ-இன்-ஒன் இப்ப த்ரீ-இன்-ஒன் செட்டாக மாறி விட்டது.
இவர்: அடடே! எப்படி?
அவர்: ரேடியோ, கேஸட், ரிப்பேர்!

—ஆர். அரிகோபி




''டைப் அடிக்கும்போது அச்சு...அச்சுன்னு ஏழு முறை தும்முனியா?''
''அது எப்படி சார் அவ்வளவு கரெக்டாச் சொல்றீங்க?''
''கடிதத்தில் ஏழு 'எச்' அதிகமா இருக்கே!''

—ஏ. சுகுமார்



சாப்பிட வந்தவர்: இன்னைக்கு மெனுவிலே என்ன ஸ்பெஷல் அயிட்டம்?
சர்வர்: கல்கத்தா காரக் குழம்பு.
சாப்பிட வந்தவர்: பெயரே புதுசா இருக்கே!
சர்வர்: நேற்று வச்ச சாம்பாருக்கு வேற எப்படி ஸார் பேர் வைக்கிறது?

—தங்கம் மணிவண்ணன்



(ஆஸ்பத்திரியில்): ''ரெண்டு நிமிஷத்துக்கு ஒரு தரம் அந்த ஆசாமியோட ரொம்ப ரொம்பக் குழைவாப் பேசிட்டு வர்றியே! யார் அவர்?''
''எனக்கு ஒரே பிரசவத்திலே ஐந்து பெண் குழந்தைகள் பிறந்திருக்கு. அவருக்கு ஒரே பிரசவத்திலே ஐந்தும் ஆண் குழந்தைகளாப் பிறந்திருக்கு. இப்பவே நிச்சயம் பண்ணிக்கிட்டால் பின்னாலே உதவுமேன்னுதான்!''

—ஈரோடு மாரிமுத்து

# சிரிப்..ப்...ப்...பூ..!



# நாய்வளர்ப்பு நாலுவித தகவல்கள்

ஸ்ரேயஸ் தன் செல்ல நாய்க்குட்டி ப்ரூஸுடன்

(கேடயங்கள் நாய்க்காக; நான்பெற்றவையல்ல)

### நாய்க்குட்டி வாங்கும்போது:

- எந்த இனமானாலும் ஐந்து முதல் ஆறு வாரக் குட்டியாக இருக்கிறதா பாருங்கள்.
- கென்னல் கிளப்பில் ஒவ்வொரு நாய்க் குட்டியின் விவரமும் பதிவு செய்யப்பட்டு சர்ட்டிஃபிகேட்டுகள் வழங்கப்படும். அதை ஆராய வேண்டும்.
- எலும்புகளின் அமைப்பைப் பார்க்கவேண்டும். இது எல்லாருக்கும் புரிகிற விஷயமல்ல.
- பற்களின் அமைப்பைக் கூர்ந்து கவனிக்க வேண்டும்.
- எதற்கும் ஒரு கால்நடை மருத்துவரை உடனழைத்துச் செல்வது நல்லது.

### தினசரி பராமரிப்பு:

நாய்களைக் கண்டதை யெல்லாம் தின்னவிடக் கூடாது. குறிப்பிட்ட நேரத்துக்குத் தவறாமல் உணவு தரப்பட வேண்டும். சடையுள்ள நாய் வகைகளை ஒன்றுவிட்டு ஒரு நாள் பிரஷ் கொண்டு வாரிச் சுத்தப் படுத்த வேண்டியது முக்கியம். உண்ணிகளை அகற்ற வேண்டும். வாரம் ஒரு முறையாவது குளிப்பாட்ட வேண்டும். நாய்களுக்கெனத் தனிப் பவுடர், கிரீம்களும் கிடைக்கின்றன. மாமிசம், பிஸ்கட், சாதம் இவை போடலாம். சாதம் வடித்த பின் கிடைக்கும் கஞ்சி சத்துள்ள உணவு.

### நோய்கள்:

மிகவும் தீவிரமானவை இரண்டு: ரேபிஸ், பாவோ வைரஸ். நாய் வாங்கிய உடனே 'ஆண்டி ரேபிஸ்' ஊசி போட்டுவிட வேண்டும். பாவோ வைரஸ் பாதிக்கப்பட்ட நாய்கள் ஒரு மாத காலத்தில் இறந்துவிடும். இதற்கு மருந்துகள் இந்தியாவில் இல்லை.

மாதத்துக்கு ஒருமுறை கால்நடை மருத்துவரிடம் கொண்டு போய்ச் சோதனைக்கு உள்ளாக்குவது நல்லது.

### சுவையான தகவல்கள்:

- உலகிலேயே மிக அதிகமான நாய்கள் கொண்ட நாடு அமெரிக்கா.
- தைவானில் 'நாய்கள் ரேஸ்' ரொம்பப் பாபுலர். ஆயிரக் கணக்கில் பந்தயம் கட்டி மணிக் கணக்கில் ஆடுவார்கள்.
- உலகின் மிகவும் முக்கியமான 'நாய்க் காட்சி' CRUFTS DOG SHOW. இங்கிலாந்தில் நடைபெறுவது. பரிசுப் பணம் குறைவாய் இருந்தாலும் நாய் வளர்ப்பவர்கள் இதில் கலந்து கொள்வதையே பெரிய கௌரவமாய்க் கருதுகிறார்கள்.
- ஜெர்மனிநாட்டு கிரேட்டேன் இனம்தான் உலகில் உயரமான நாய் இனம். இதன் குறைந்தபட்ச உயரம் 33 அங்குலம்.
- மிகச்சிறிய நாய் இனம் CHIHUAUA. மெக்ஸிகோ நாட்டின் இனம். இதன் அதிக பட்ச உயரம் 9 அங்குலம்.
- இந்தியாவில் நாய் வளர்ப்போர்சங்கங்கள் இரண்டு இருக்கின்றன. (1) இந்தியன் கென்னல் கிளப் (2) ஃபெடரேஷன் ஆஃப் கென்னல் கிளப்ஸ் ஆஃப் இந்தியா.

### கொசுறு:

மேல் சொன்ன தகவல்களை யெல்லாம் தந்தது 'ஸ்ரேயஸ்' என்ற டான்பாஸ்கோ பள்ளி ப்ளஸ் டூ மாணவன். ஏழெட்டு வயதிலிருந்தே நாய் வளர்ப்பில் மிகுந்த ஆர்வம். 'ஸ்ரேயஸ்' தற்போது எட்டு நாய்க் குட்டிகள் வைத்திருக்கிறான். பராமரிப்புக்கு மாதம் 500 ரூபாய் செலவழிக்கிறான். ''நீ நாய்கள்வளர்ப்பதில் எனக்கு ஆட்சேபமில்லை. ஆனால் செலவழிக்கிற பணத்தைத் திரும்பச் சம்பாதித்துவிட வேண்டும்'' என்று கண்டிப் பாய்ச் சொல்லிவிட்டாராம் ஸ்ரேயஸின் அப்பா.

அவர் யார் தெரியுமா? சென்னை நகர போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால்தான்.

-எஸ். சந்திரமௌலி

மூன்றாவது அட்டை வண்ணப்படம்: உத்ரா

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

